K. SUBRAMANIA PILLAI, M.A., M.L.,
ADVOCATE
TAGORE PROFESSOR OF LAW (1920)
(Professor of Tamil
ANNAMALAI UNIVERSITY)

16, Ranganatha Street
T. N., MADRAS

Dated, 16—5—'40

யாழ்ப்பாணத்து நவாலியூர்ப் பெரும் புலவராகிய திருவாளர் **ந. சி. கந்தையா பிள்ளை** அவர்கள் இயற்றிய **தமிழர் சரித்திரம்** என்னும் நூலானது மக்கள் தோற்றத்தைப் பற்றிய தொன்னூல்கள் பலவற்றின் ஆராய்ச்சிப் பயனையும் எகுப்தியர், சுமேரியர், பழைய சிந்து நாட்டினர், முதலிய பண்டை நாகரிக மக்களின் வரலாற்றினைப் பண்டைத் தமிழர் வரலாற்றினோடு ஒப்பிட்டு ஆய்ந்ததின் பயனையும் அமைந்துள்ளது கண்டு பெருமகிழ்வடைந்தேன். இந் நூல் எளிய தமிழ் நடையில் தக்க முறையில் எழுதப்பட்டுள்ளது. ஐவகை நிலமக்கள், நால்வகை மரபினர், சங்க நூற்றெய்வங்கள், பண்டைத்தொழில் வகைகள், தமிழர் ஆரியர் கலப்பு என்பவற்றைப் பற்றிய அரிய கருத்துக்கள் கற்பாருக்குப் புத்தறிவு பயப்பன.

இவ்வாசிரியரது **தமிழகம் என்னுஞ் சிறந்த நூலானது** நில நூலாராய்ச்சி, மொழி நூலாராய்ச்சி, தமிழ் இலக்கண இலக்கிய ஆராய்ச்சி என்பவற்றின் பெரும் பயனாகிய அரிய கருத்துக்கள் நிறைந்துள்ளது. பண்டைத் தமிழரின் பழக்க வழக்கங்கள், வீரம், காதல், கற்பு, சமுதாயப் பிரிவுகள், போர், கலை, மூலநூல் முதலியவற்றின் விவரங்களும் சங்க இலக்கியம், பிற பெருங் காப்பியங்கள் முதலியவற்றின் சாரங்களும் இதனுள் இனிது விளக்கப்பட்டுள்ளன. தமிழரையும் தமிழகத்தையும் பற்றி இன்றியமையாது அறிய வேண்டியவை யாவும் இந்நூலுட் காணப்படும். தமிழ்வாணருக்கு இது ஒரு நல்ல அறிவு விருந்தாய்த் திகழ்வதால் தமிழுலகம் இவ்வாசிரியருக்கு நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது.

**கா. சுப்பிரமணிய பிள்ளை.**

# அறிவுரை மாலை

தொகுப்பாசிரியர் :

**திரு. ந. சி. கந்தையா பிள்ளை**

(1. தமிழகம், 2. தமிழர் சரித்திரம், 3. கலிங்கத்துப்பரணி வசனம் முதலியனவும் பிறவுமாகிய பல நூல்களின் ஆசிரியர்)

1940



---

1. Text book for Vidvan Preliminary Examination of Madras University. Text Book for Vidvan Preliminary and Final Examinations of Annamalai University.

2. Text Book for Vidvan Examination of Madras University.

3. Text Book for Tamil J. S. C. Examination 1941

# முகவுரை

இந்நூலகத்து மாணவருக்கு இன்றியமையாத 14 கட்டுரைகள் தொகுக்கப்பட்டுள்ளன. அவை பெரும்பாலும் ஆராய்ச்சி ஆற்றல் மிக்க பலரால் எழுதப்பட்டனவாகும். குண்டலகேசிக் கதைச் சுருக்கம், நீலகேசிக் கதைச் சுருக்கம், முதலிய வரலாறுகள் பெரும்பாலும் அறியப்படாதனவா யிருத்தலின் அவற்றை அரிதில் முயன்று பெற்று இந் நூலுட் சேர்த்துள்ளோம். இந்நூல் மாணவருக்கு அறிவு விருந்துபோன்றது. எமது ஏனைய நூல்கள்போல இந்நூலும் உலகில் அங்கீகாரம் பெறும் என்னும் நம்பிக்கையுடையேம்.

ந. சி. கந்தையா.

# பொருளடக்கம்

# அறிவுரை மாலை



## 1. * இருமலையும் நிகரேயாம்

வேனிற்காலத் தென்றல் இனிமையாக வீசுகின்றது. மேகம் திரண்டு தென்மலையில் தவழ்கின்றது. குன்ருத வளமுடைய குற்ருல மலையினின்றும் ஒரு குறவஞ்சி புறப்பட்டாள். பொன்ருத வளமுடைய பொதிய மலையினின்றும் மற்ெருரு குறமாது புறப்பட்டாள். இரு வஞ்சியரும் இடை நிலத்தில் ஒருவரை ஒருவர் எதிர்ப்பட்டார்கள். தன் மலையைப் புகழும் தன்மைவாய்ந்த குற்ருலக் குறவஞ்சி திரிகூடமலையின் பெருமையை விரிவாகக் கூறத் தொடங்கினுள்.

"தவமுனிவர் கூட்டுறவும்
அவரிருக்கும் குகையும்
சஞ்சீவி முதலான
விஞ்சை மூலிகையும்
கவன சித்தர் ஆதியரும்
மவுன யோகியரும்
சுத்திருக்கும் கைலாயம்
ஒத்திருக்கும் அம்மே"

---

* சென்னைப் பல்கலைக்கழகப் போதகாசிரியர் R. P. சேதுப பிள்ளை, B.A., B.L. அவர்கள் எழுதியது.

என்று குற்றால மலையின் பெருமையைக் குறவஞ்சி ஒருவாறு கூறினாள்.

அம்மே! எனது மலை ஈசன் வாழும் கயிலை மலையை ஒப்பதாகும். அங்கு தவமுனிவர் குழாம் குழாமாய்த் தங்கி வாழ்கின்றார்கள். யோகியரும் சிந்தையை ஒடுக்கிச் சீரிய தவஞ் செய்கின்றார்கள். சஞ்சீவி முதலான விஞ்சை மூலிகைகள் எங்கும் செழித்து வளர்கின்றன. மாதவத்தோர் தவம் புரியும் மலைக் குகைகள் எம்மருங்கும் மாண்புற விளங்குகின்றன. "என்மலையை ஒப்பது கைலைமலை ஒன்றே" என்று தன் மலைப்பெருமையை மலைமாது கூறினாள். இதைக்கேட்ட பொதிய மலைக் குறவஞ்சி மனத்தில் புதியதோர் ஊக்கம் பிறந்தது. குற்றால மலையிலும் தன்மலை சிறந்ததென்று குறவஞ்சியிடம் கூறத் துணிந்தாள். குற்றாலக் குறமாதை நோக்கி, வஞ்சியே, என் மலையின் பெருமையை மறைத்து வஞ்சமாய்ப் பேசுகின்றாயே.

"திங்கள்முடி சூடுமலை
தென்றல் விளையாடும் மலை
தங்கும் முயல் சூழுமலை
தமிழ் முனிவன் வாழுமலை
அங்கயற்கண் அம்மைதிரு
அருள் சுரந்து பொழிவதென
பொங்கருவி தூங்கும் மலை
பொதிய மலை என் மலையே"

என்று பொதிய மலையைப் புகழ்ந்துரைத்தாள். "வஞ்சி! எனது மலையின் திருமுடியில் வெண்மதி

விளங்கும். மலை எங்கும் மந்தமாருதம் இருந்து விளையாடும். தமிழை வளர்க்கும் தவமுனிவன் அங்கு தங்கி வாழ்வான். அங்கயற்கண் அம்மையின் அருள்போல அருவி நீர் பொழியும். இதனினும் சிறந்த மலை இவ்வுலகில் உண்டோ" என்று குற்றாலக் குறவஞ்சியைக் குமைக்க முயன்றாள்.

இவ்வாறு பொதிய மலை மாது பொதிந்துரைத்த சொற் கேட்ட குற்றாலக் குறவஞ்சி தன் மலையி லமைந்த அருவியின் பெருமையையும், பூக்களின் பண்பையும் மலர்களின் மாண்பையும் மிக ஏற்ற தாய் எடுத்துரைக்க எண்ணினாள்.

"முழங்கு திரைப்புனல் அருவி
கழங்கென முத்தாடும்
கிழங்கு கிள்ளித் தேனெடுத்து
வளம் பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து
வெம்புதினை இடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின்
பழங்களைப் பந்தடிக்கும்
தேனலர் சண்பக வாசம்
வானுலகில் வெடிக்கும்
வழங்குகொடை மகாராசர்
குறும்பலவி லீசர்
வளம் பெருகும் திரிகூட
மலையெங்கள் மலையே"

அம்மே! எனது குற்றால அருவி உன் மலை அருவியிலுங் குறைந்ததோ? கண்டோர் வியக்கும்

அவ்வருவி வெண் முத்தைக் கழங்காய் விளையாடும். அவ்வருவி நீர் பெருகி எங்கள் சிறுமியர் சிறு வீட்டை அடித்துக் கொண்டோடும். இன்னும் எனது மலைவளம் கூறுகின்றேன் கேள். அம்மலையில் விளையும் இனிய கிழங்குகளை நாங்கள் அகழ்ந்து எடுப்போம். தேனுந் தினைமாவும் உண்டு திளைத்திடுவோம். இன்னும் அம்மலையில் இலங்கும் மாங்கனிகளை வானரங்கள் மாந்தி மகிழ்ந்து பந்தடித்து விளையாடக் கண்டு களிப்போம். வானுற ஓங்கிய மரங்களின் மலர்கள் விண்ணுலகில் வெடித்து மணம் வீசும். இத்தகைய மலைக்கு உன் மலை இணையாகுமோ" என்று இறுமாந்து கூறினாள். இவ்வாறு குற்றால மாது குளிர்ந்து உரைத்த மாற்றம் பொதிய மலை மாதின் மனத்தை வெதுப்பியது. வண்ணமாய சொற்களால் தன் மலை வளம் கூறத் தொடங்கினாள்.

"கொழுங்கொடியின் விழுந்தவள்ளிக்
கிழங்கு கல்லி எடுப்போம்
குறிஞ்சிமலர் தெரிந்துமுல்லைக்
கொடியில் வைத்துத் தொடுப்போம்
பழம்பிழிந்த கொழுஞ்சாறும்
தேறலும்வாய் மடுப்போம்
பசுந்தழையு மரவுரியும்
இசைந்திடவே யுடுப்போம்
செழுந்தினையு நறுந்தேனும்
விருந்தருந்தக் கொடுப்போம்
சினவேங்கைப் புலித்தோலின்

பாயலிற்கண் படுப்போம்
எழுந்துகயற் கணிகாலில்
விழுந்துவினை கெடுப்போம்
எங்கள்குறக் குடிக்கடுத்த
வியல்பிதுகா ணம்மே"

ஏ, வஞ்சி! மலையின் வளத்திலும் மலர்களின் மணத்திலும் என் மலை உன் மலைக்கு இளைத்ததென் றெண்ணாதே. எனது மலையில் கொழுங் கொடியில் செழுங் கிழங்கு வீழும். அக்கிழங்கை அகழ்ந் தெடுத்து நாங்கள் மகிழ்வோம். குன்றில் நிறைந்த குறிஞ்சி மலர் கொய்து குழைந்த முல்லைக் கொடியில் வைத்துத் தொடுப்போம். பழம் பிழிந்து சாறெடுத்து அதனைத் தேனோடு கலந்து தினமும் உண்போம். செழுந் தினையும் நறும் தேனும் விருந்தினருக்குக் கொடுப்போம். பதனிட்ட புலித்தோலைப் பாயலாக விரிப்போம். காலையிலெழுந்து கருணை வடிவாய அம்மையைத் தொழுவோம். இத்தகைய மலையிலும் செம்மை வாய்ந்த மலை எங்குமே யில்லை என்று செம்மாந்து எடுத்துரைத்தாள்.

இவ்வாறு அருவியிலும் இரு மலையும் நிகரெனவே குற்றால மாதின் மனத்தில் தோன்றியது. ஆகவே, வேறு வகையால் பொதிய மலை மாதை வெல்லக் கருதினாள். புதுப் பெருமையற்றோர் பழம் பெருமை கூறும் பான்மை போலக் குற்றாலக் குறவஞ்சி தனது நாட்டின் தொன்மை கூறத் தொடங்கினாள்.

எனது நாடு நன் நாட்டின் முன்னாட்டும் நாடாகும். விண்ணோரும் விரும்பும் விழுமிய நாடாகும். நீங்காத வல்வினையும் நீங்கிய நன் நாடாகும். முக்கண்ணன் ஆடிய முதுமை பெறு நாடாகும். இத்தகைய பழம் பெருமை உனது நாட்டுக்கு உண்டோ என்று அளவிறந்த மகிழ்ச்சியால் ஆடிப்பாடினாள். குற்றால மாது கூறிய நாட்டின் பெருமையை நன்றாய்க் கேட்ட பொதிய மலை மாது புன்முறுவல் பூத்துத் தன் மலையின் பழம் பெருமையைக் கூறத்தொடங்கினாள். இறையவரும் மறையவரும், வடகலையும் தென்கலையும், நவமணியும் குருமணியும் போற்றி யுறையும் பொதிய மலையின் பெருமையைக் குறமாது நிறைமொழிகளாற் கூறுகின்றாள்.

" மந்தமாருதம் வளரு
மலை யெங்கள் மலையே
வடகலை தென்கலைபயிலு
மலையெங்கண் மலையே
கந்தவேள் விளையாடு
மலையெங்கள் மலையே
கனக நவமணிவிளையும்
மலையெங்கண் மலையே
இந்தமாநிலம் புரக்கு
மங்கையற்கண் அம்மை
இன்பமுறும் தென்பொதிய
மலையெங்கண் மலையே "

அம்மே! மந்தமாருதம் வளரும் மலை எங்கள் மலையேயாகும். வடகலையும் தென்கலையும் வளர்ந்

தோங்கு மலை எங்கள் மலையேயாகும். கந்தவேள் விளையாடும் மலை எங்கள் மலையேயாகும். பொன்னும் நவமணியும் பொருந்திய மலை எங்கள் மலையேயாகும். அங்கயற்கண் அம்மை அருள் சுரந்து அமரும் மலை எங்கள் மலையேயாகும். இவ்வாறு இமையோரும் மறையோரும் விரும்பி உறையும் இணையற்ற நாடு எங்கள் நாடேயாகும் என்று பொதிய நாட்டின் பழம்பெருமை கூறக் கேட்ட குலவஞ்சி சிறிது குனிந்தாள்.

நாட்டின் பெருமை கூறிய பொதிய மலைக் குறத்தியை வெல்ல இயலாதென்றறிந்து குற்றாலக் குறமாது ஆற்றின் பெருமையால் அம்மாதை வெல்லக் கருதினள். ஞானிகளும் அறியாத சித்திர நதியின் பிறப்பையும் சிறப்பையும் குறவஞ்சி கூறத் தொடங்கினள். திரிகூடமலையில் தேனருவித் திரையாய் எழும்பிச் சிவகங்கை ஆறாய்ப் பரந்து செண்பக அடவியின் வழியாய்ச் சென்று பொங்குமா கடலில் வீழ்ந்து சித்திர நதியாய்ப் பாயும் சிற்றாற்றின் பெருமையை நிறைந்த சொற்களாற் போற்றிப் புகழ்ந்தாள். அப்பால் அந்நதி பெருகிவரும் பெருமையையும் அவ்வாற்றில் உகளும் மீன்களின் வகைகளையும் குறவஞ்சி கூறத் தொடங்கினள்.

குற்றால மலையினின்று பெருகியோடும் சித்திர நதியில் பசவையும், குசவையும், வாளையும், கோளையும், தேளியும், உளுவையும், மயிந்தியும், பயிந்தியும், அசரையும், மசரையும், அராலும், விராலும் அங்குமிங்கும் பாய்ந்து விளையாடும் பெருமை

யைக் குறவஞ்சி விளக்கமாகக் கூறினாள். இதனைக் கேட்ட பொதிய மலைக் குறமாது தனது மலையில் தோன்றும் பெரியாறென்னும் பொருனையாற்றின் பெருமையையும் அவ்வாற்றில் அமைந்த மீன்களின் வகையையும் அழகுற எடுத்துரைத்தாள். குருமுனிவன் வாழும் மறைவிடத்தே தோன்றி வானருவியாய் விழுந்து கல்யாணி தீர்த்தமாய் இழிந்து பொருனையாய்ப் பெருகி வரும் பொதியமலை ஆற்றின் பெருமையைக் குறமாது கனிந்த சொற்களால் மொழிந்தாள். அவள் பொருனையாற்றின் பெருமையை வியந்து கூறக் கேட்ட குறவஞ்சி பொதிய மலையின் பெருமையை அறிந்து இருமலையும் நிகரென்னும் இதற்கு ஐயமிலதேயாம் என்னும் சமரச அறிவோடு சாந்தமாய்ப் பிரிந்து சென்றாள்.

# 2. நச்சினார்க்கினியர்

*" பச்சைமா லனைய மேகம்
பௌவநீர் பருகிக் கான்ற
வெச்சினாற் றிசையு முண்ணு
மமிழ்தென வெழுநா வெச்சின்
மெச்சிநா ளுணும் விண்ணோர்
மிசைகுவர் வேத போத
னச்சினார்க் கினிய னெச்சி
னறுந்தமிழ் நுகர்வர் நல்லோர்."

புலவர் உச்சிமேற் கொள்ளும் நச்சினார்க்கினியர் பாண்டிவள நாட்டிலே மதுராபுரியிற் பிறந்தவர்; அந்தண மரபினர்; பாரத்துவாச கோத்திரத்தினர்; சைவ மதத்தினர்.

இளம்பூரணர், பேராசிரியர், சேனாவரையர், ஆளவந்த பிள்ளை ஆசிரியர் முதலிய உரையாசிரியர்கள் இவர் உரையில் எடுத்துக் கூறப்படுகின்றமையின், இவர் அவர்கள் காலத்தவர் அல்லது பிற்பட்டவர் ஆதல் வேண்டும். பரிமேலழகரும் இவரும் ஒரே காலத்தவர்களென்றும் கருதப்படுகின்றனர்.

*இதன் பொருள்: பச்சைமால் போன்ற மேகம் கடல் நீரைப் பருகி உமிழ்ந்த எச்சிலாகிய மழை நீரை நாற்றிசைகளிலுமுள்ள உயிர்கள் அமிழ்து எனும்படி விரும்பி யுண்ணும்; தீயின் எச்சிலாகிய ஆவுதியைத் தேவுக்கள் விரும்பித் தினந்தினம் நுகர்வர்; அறிவுடையோர் அந்தணராகிய நச்சினார்க்கினியரின் எச்சிலாகிய நறிய தமிழை நுகர்வர்.

பரிமேலழகர் கொள்கையை இவர் திருமுருகாற்றுப் படை உரையில் மறுத்திருக்கின்றார்.

திருமுருகாற்றுப்படை பதினோராந் திருமுறையின் ஒரு பகுதியாயுள்ளது. திருமுறை நம்பியாண்டார் நம்பியாரால் வகுக்கப்பெற்றது. நம்பியாண்டார் நம்பியின் காலம் பதினோராம் நூற்றாண்டென்பர். திருமுருகாற்றுப்படை பதினோராந் திருமுறையிற் சேர்க்கப்பட்டுள்ளதை நச்சினார்க்கினியர் கூறிற்றிலர். ஆகவே நச்சினார்க்கினியர் திருமுறை வகுப்பதற்கு முன்னிருந்தவராதல் வேண்டும். இன்றேல் திருமுருகாற்றுப்படை திருமுறையுட் பிற்காலத்துச் சேர்க்கப்பட்டதாதல் வேண்டும். உரை ஆசிரியர்களின் காலம் பன்னிரண்டாம் நூற்றாண்டுக்கும் பதினன்காம் நூற்றாண்டுக்கும் இடையிலெனை இக்கால ஆராய்ச்சியாளர் கூறுவர்.

பத்துப்பாட்டு, தொல்காப்பியம், கலித்தொகை, சீவகசிந்தாமணி, குறுந்தொகையிற் பேராசியர் பொருளெழுதா தொழிந்த இருபது செய்யுள் முதலிய நூல்களுக்கு இவர் உரை செய்தனர். இதனை,

> "பாரத்தொல் காப்பியமும் பத்துப்பாட் டுங்கலியு
> மாரக் குறுந்தொகையு ளைஞ்ஞான்குஞ்—சாரத்
> திருத்தகு மாமுனிசெய் சிந்தா மணியும்
> விருத்திநச்சி னார்க்கினிய மே"

என்னும் வெண்பா விளக்குகின்றது.

இவர் சீவகசிந்தாமணிக்கு முதன் முறை ஓர் உரை எழுதினர். அக்காலத்துப் புகழ்பெற்றிருந்த சைன வித்துவான்கள் அவ்வுரையை அங்கீகரித்

திலர். அதுகண்டு இவர் அருகத நூல்கள் பலவற்றையும் நலமுற ஆராய்ந்து இரண்டாவது ஓர் உரை எழுதி அவர்களுக்குக் காட்ட அவர்கள் உற்று நோக்கி வியந்து அவ்வுரையை அங்கீகரித்துக் கொண்டனர் என்று சைனர் கூறுவர்.

இவர் தொல்காப்பிய உரை முதலிய வற்றில் வேதம் வேதாங்கம் முதலிய நூல்களிலிருந்தும், பல உரைகளிலிருந்தும் பற்பல பொருள்களை எடுத்து ஆங்காங்கு நன்கு காட்டிப் போகின்றனர். அதனால் இவர் வடமொழியிலும் மிக்க பயிற்சி யுடையவரென்று சொல்லுவதுடன் பலவகையான கலைகளிலும் வல்லவரென்றும் சொல்ல இடமுண்டு.

இவர் காலத்தில் பரிமேலழகர் உடனிருந்தாரெனக் கூறுவோர் "குடம்பை தனித்தொழியப் புட்பறந்தற்றே - உடம்போ டுயிரிடை நட்பு" என்னும் குறளில் 'குடம்பை' என்பதற்கு நச்சினார்க்கினியர் கூண்டு எனவும், பரிமேலழகர் முட்டை எனவும், பொருள் கூறினர் எனவும், நச்சினார்க்கினியர், பரிமேலழகர் உரையைப் புகழ்ந்தனரெனவுங் கூறுவர்.

* பாற்கடல்போற் பரந்த நல்ல நூல்களின் உயர்ந்த பொருள்களை நுண்ணிதாகக் கற்றுணர்ந்த குற்றந்தீர்ந்த கேள்வியுடைய புலவர்கள் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் நாற்பொருள் பொதிந்த நூல்களைச் செய்தனர். நச்சினார்க்கினியர்

---

* இது நச்சினார்க்கினியர் உரைச் சிறப்புப்பாயிரம் என்னும் செய்யுளின் வசன நடை.

அந்நூல்களை யெல்லாம் துறைபோகக் கற்றறிந்த சிந்தையுடையர்.

எழுத்தும் சொல்லும் பொருளுமாகிய மூன்றும் இழுக்கின்றி அமைந்த திருந்திய பழைய புகழு டைய தொல்காப்பியம் என்னும் ஆழ்ந்த கடற் பரப்பை நாவாய் கொண்டு கடந்து பெரிய கரையை அடைதலரிது. அதனைக் கற்றுக் கரைகாணமாட் டாத கல்லா மாந்தர் கற்றுக் கரையேறுதல் வேண் டியும், நல்ல அறிஞர் விரும்புதல் வேண்டியும், மறு வுங் குறையுமின்றிக் கதிருடைய கலை நிறைந்த முழு மதிபோல, இவர் காண்டிகை உரை செய்தார்; பண்டையோர் புகழ்ந்த நூல்களை ஆராய்ந்து, சான்றோர் பாடிய தண்ணிய தமிழின் சுவையைக் கற்போர் விளங்குமாறு பத்துப்பாட்டுக்குத் தெள் ளிய உரை எழுதினார். கடல் சூழ்ந்த உலகில் அறி வுடையோர் பயிலுங் கலித்தொகைக் கருத்தினை விளக்கியும், உள்ளுறை உவமம் ஏனையுவமம் உரிப் பொருள் மெய்ப்பாடு வினைமுடிவு முதலியவற்றைக் காட்டியும் யாவரும் போற்ற இனிய உரை எழுதினார்.

இவர் உலகம் புகழ்ந்து கொண்டாடும் சிந்தா மணிக்குத் திருத்தக்கதேவரின் கருத்து இதுவென நுண்ணுரை செய்த புலமையுடைய ஆசிரியர்; பேரா சிரியர் உரை எழுதாதொழிந்த குறுந்தொகையின் இருபது பாடல்களுக்கும் உரைசெய்த புகழமைந்த மறையோன்; எட்டுத்திசைகளிலும் புகழ் விளங்க, வண்டு ஒலிக்கும் சோலையுடைய மதுராபுரியிற் றோன்றிய ஆசிரியன்; பாரத்துவாசி கோத்திரத்

திற் றோன்றியவரும், நான்மறை துணிந்து கூறும் நற்பொருளாகிய ஞானம் நிறைந்தவருமாகிய சிவச் சுடர்; தனக்குத்தானே ஒப்பாகிய தன்மையும் மெய்ம்மையுமுடைய நச்சினார்க்கினியன் என்னும் பெயரோன். இருவினைகளையும் போக்கும் அருவி யுடைய பொதிய மலையிலிருக்கும் குறுமுனிவர் ஆராய்ந்த தமிழ் விளங்க அவன் புகழ் இவ்வுலகில் ஊழிகாலம் விளங்குவதாக.

“ எவனுல வாயிடைவந் தமுதவா
யுடையனென வியம்பப் பெற்றோன்
எவன் பண்டைப் பனுவல்பல விறவாது
நிலவவுரை யெழுதி யீந்தோன்
எவன்பரம உபகாரி யெவ
னச்சி னார்க்கினிய னெனும்பேராளன்
அவன்பாத விருபோது மெப்போது
மலர்கவென தகத்து மன்றே ”

(இ-ள்) எவன் மதுரையிற் பிறந்து அமுதவாயன் என்று சொல்லப்பெற்றோன்? எவன் பழைய நூல்கள் இறந்து போகாது நிலவ உரை யெழுதி அளித்தோன்? எவன் பெரிய உபகாரி? எவன் நச்சினார்க்கினியன் எனும் பெயருடையோன்? அவனது பாதங்களாகிய இருமலர்களும் என்னகத்து எப்போதும் மலர்வனவாக.

# 3. சரித்திரம்

கழிந்த நிகழ்ச்சிகளை உள்ளவாறு மொழிதல் சரித்திரம் எனப்படுகின்றது. கட்டுக்கதைகள் சரித்திரமாகா. சரித்திரத்தையும் கட்டுக் கதைகள் போன்ற பரம்பரைக் கதைகளையும் பிரித்து அறிவது இலகுவன்று. எழுத்துப் பிரமாணங்கள் முற்ருகக் கொள்ளத்தக்கனவல்ல. சில கன்ன பரம்பரைக் கதைகள் சரித்திரங்களோடு கலந்திருத்தல் கூடும். கன்ன பரம்பரைக் கதைகள் மிகவும் சந்தேகமானவையாயும், சில வேளை கட்டுக்கதைகளாயும் மறந்துவிடத்தக்கனவாயும் இருக்கும். மனிதன் கன்ன பரம்பரைக் கதைகளை வைத்துக் கொண்டு பல கற்பனைக் கதைகளை உண்டாக்கியிருக்கிருன். இதனுல் உண்மைக் கதைகளையும் கட்டுக்கதைகளையும் பிரித்தறிய முடியாமல் இருக்கின்றது.

சரித்திரம் எழுதுவதற்கு உண்மையான ஆதாரங்கள் மாத்திரம் போதுமானவையல்ல. அநேக உண்மைச் சரித்திரங்களும், காலக் குறிப்புகளும் எகிப்து, அசீரியா, சீனம் முதலிய நாடுகளைப்பற்றிக் காணப்படுகின்றன. உண்மைச் சரித்திரங்களாயினும் அவை அந்நாடுகளின் சரித்திரம் எழுதுவதற்குப் போதுமானவையல்ல. ஒரு காலத்தில் இருந்த அரசன் அடுத்த தேசத்து அரசனேடு போராடி வென்ருன் அல்லது தோற்ருன் என்பன போன்ற

குறிப்புகள் கால சம்பந்தமான உபயோகமுள்ளன. ஆனால் அவை சரித்திரம் ஆகமாட்டா. காலக் குறிப்புகள் மாத்திரமல்ல, சமூக நிகழ்ச்சிகள், அவைகளின் படிப்படியான முன்னேற்றம், அவைகளின் வளர்ச்சிக் காலத்தில் மாற்றமடைந்த பொருள்கள், அவை ஒரு போக்கிலிருந்து இன்னொரு போக்கில் மாறுதல் முதலியவற்றை எல்லாம் விளக்கிக் கூறுவதே சரித்திரமாகும்.

மனிதர் விசாலித்த பூமியின் மேற்பரப்பில் வாழ்ந்து வருகின்ற காலத்தையும் இடத்தையும் உணர்த்தும் சரித்திரமோ அற்பமானது. பழைய அநாகரிக மனிதருக்குச் சரித்திரம் இல்லை. சீவியத்தின் பொருட்டுப் போராடுவதில் அவர்களுடைய சக்தி ஓய்ந்துவிட்டது. அவர்கள் தம்மைக் கூட்டமாக ஒத்து வாழும் சீவர்களாக நினைக்கவும் சமூக சம்பவங்களை எழுதவும் நேரம் பெறவில்லை. அரைகுறையாகத் திருத்தமடைந்த மனிதர் சரித்திரமெழுதும் அறிவைப் பெறாமலும் அதற்கு வேண்டிய ஆதாரங்கள் இல்லாமலும் இருந்தனர். சாதி என்று சொல்லப்படுகின்ற பழமையான அடக்கியாளும் பரம்பரை வழக்கினால் இந்தியா, எகிப்து, சீனா முதலிய நாடுகளின் சமூக வளர்ச்சி மிகவும் பைய ஊர்ந்து செல்கின்றது. சில சமயங்களில் அது வளரவில்லை என்று கூறத்தக்கவாறு மெதுவாகச் செல்கின்றது.

பாட்டன் வாழ்ந்ததுபோலவே பௌத்திரனும் வாழ்கின்றான். இந்நிலைமையில் சரித்திரம் எழுதுவ

தற்கு வேண்டிய பொருள் இல்லாமல் இருக்கின்றது. பெரிய சன சமூகம் தலைமுறையாக ஒரே வகையான நிலைமையில் வாழ்தல் மிகவும் அவதானிக்கத்தக்கது. கிழக்குத் தேசங்களில் யுத்தமும் சமாதானமும் பெரிய மாறுதல்களைச் செய்திருக்கும் என்று தெரிகின்றது. ஆனால் அவ்வகையான மாறுதல்கள் சரித்திர சம்பந்தம் பெறாமலும் பெறுபேறுகள் குறிக்கப்படாமலும் இருக்கின்றன.

உண்மையான சரித்திரத்துக்கு நாலாயிரம் வருடங்களை மாத்திரம் கொள்ளலாம். ஆரம்பம் பழைய ஏற்பாட்டுச் சரித்திரங்கள் ஆகலாம். யூதர்களின் சரித்திரக் குறிப்பு முடிவடைவதன்முன் கிரேக்கர் சரித்திரம் எழுத ஆரம்பித்தனர். அடுத்த படியில் உரோமர் தொடர்பான சரித்திரம் எழுதி வந்திருக்கின்றனர். இப்பொழுது சரித்திரத்துக்குள்ள ஆதாரங்கள் மேற்கிலும் தெற்கிலும் கிழக்கிலும் அதிகம் கிடைக்கின்றன.

உண்மைச் சம்பவங்களை விசாரணை செய்வதில் ஆரம்ப சரித்திரக்காரர் பிரயாசை எடுக்கவில்லை. சரித்திரகாரராவது சரித்திரத்தைப்படிப்போராவது உண்மையான சம்பவங்களைப் பொருட்படுத்தும் நிலைமையை அடையவும் இல்லை. ஆரம்ப சரித்திரகாரர் உண்மைச் சம்பவங்களை விளக்குவதிலும் பார்க்கச் சனங்களைக் கவரக்கூடிய கற்பனைகளிலும் சுவைகளிலும் கவனஞ் செலுத்தினர்.

இரங்கத்தக்க அல்லது நகைக்கத்தக்க ஒரு நல்ல கதை உண்மை ஆராயப்படாதே விரும்பப்

பட்டது. அவ்வகையான கதைகளில் நேர்மைக்கும் துன்மார்க்கத்துக்குமுள்ள தாரதம்மியங்கள் உச்ச நிலையிற் கூறப்படுகின்றன. இவைகளே பழஞ் சரித்திர ஆசிரியர்களின் நோக்கங்களாயிருந்தன. பழைய நாடக ஆசிரியர்களைப்போலவே இவர்களும் உண்மைகளோடு கட்டுக்கதைகளையும் கலந்து எழுதினர். அவர்கள் எடுத்துக்கொண்ட பொருள்கள் ஒரே வகையின. தேசத்தைக் காப்பாற்றிய வீரனைப்பற்றியும் தோற்கடிக்கப்பட்ட சத்துராதியைப் பற்றியுமே நாடகங்கள் எழுதப்பட்டன. அவர்களைப் பற்றிய வருணனைகள் உணர்ச்சி யுண்டாக்கத்தக்க கற்பனைகளாயிருந்தன. இவை கண்டிக்கத்தக்கனவா யிருந்தபோதும் பேச்சு வன்மைக்கும் ஆவேசத்துக்கும் ஏற்றனவாயிருந்தன. ஹெரதோதஸ் (கி. மு. 500) முதலிய கிரேக்க சரித்திராசிரியர்களால் எழுதப்பட்ட சரித்திரங்கள் இவ்வகையினவே.

பழைய சரித்திரம், ஒரு பொருளைப் பார்த்து அதன் சரியான சாயலை வரையாது மற்ற எல்லா அழகுகளும் தோன்ற வரையப்பட்ட சித்திரம் போன்றது. முற்கால ஆசிரியர்கள் பொது மக்களுக்குச் சரித்திரம் எழுதினார்களேயன்றிச் சரித்திரக் கலையைப் பயில்வோர்க்காக எழுதவில்லை என்று கூறலாம்.

# 4. * முச்சங்கமும் இறையனார் அகப்பொருளும்

தலைச்சங்கம், இடைச்சங்கம், கடைச்சங்கமென மூவகைப்பட்ட சங்கம் இரீஇயினார் பாண்டியர்கள். அவருள் தலைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், திரிபுரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றெறிந்த குமரவேளும், முரஞ்சியூர் முடிநாகராயரும் நிதியின் கிழவனுமென, இத்தொடக்கத்தார் ஐஞ்ஞூற்று நாற்பத்தொன்பதின்மரென்ப. அவருள்ளிட்டு நாலாயிரத்து நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினாரென்ப. அவர்களாற் பாடப்பட்டன எத்துணையோ பரிபாடலும், முதுநாரையும், முதுகுருகும், களரியா விரையுமென இத்தொடக்கத்தன. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப. அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சின வழுதி முதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்மரென்ப. அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியரென்ப. அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது கடல் கொள்ளப்பட்ட மதுரை என்ப. அவர்க்கு நூல் அகத்தியம்.

இனி இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும், தொல்காப்பியனாரும், இருந்தையூர்க் கருங்கோழி

* இது இறையனார் அகப்பொருளுரையிலிருந்து எடுக்கப்பட்டது.

யும், மோசியும், வெள்ளூர்க்காப்பியனும், சிறுபாண் டரங்கனும், திரையன்மாறனும் துவரைக்கோனும், கீரந்தையுமென இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன் பதின்மரென்ப. அவருள்ளிட்டு மூவாயிரத்தெழு நூற்றுவர் பாடினா ரென்ப. அவர்களாற் பாடப் பட்டன கலியும், குருகும், வெண்டாளியும், இசை நுணுக்கமும், பூத புராணமுமென இவை யென்ப. அவர் மூவாயிரத்தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தா ரென்ப. அவரைச் சங்கமிரீஇயினார், வெண்டேர்ச் செழியன் முதலாக முடத்திருமாறனீறாக ஐம்பத் தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங்கேறினார் ஐவர் பாண்டிய ரென்ப. அவர் சங்கமிருந்து தமிழ் ஆராய்ந்தது கபாடபுரத் தென்ப. அக்காலத்துப் போலும் பாண்டியனாட்டைக் கடல் கொண்டது.

இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும், சேந்தம்பூதனாரும், அறிவுடைய ரனாரும், பெருங்குன்றூர்க்கிழாரும், இளந்திருமாற னும், மதுரையாசிரியர் நல்லந்துவனாரும், மருதனிள நாகனாரும், கணக்காயர்மகனார் நக்கீரனாருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்ம ரென்ப. அவருள்ளிட்டு நானூற்று நாற்பத்தொன்பதின்மர் பாடினா ரென்ப. அவர்களாற் பாடப்பட்டன நெடுந் தொகை நானூறும், குறுந்தொகை நானூறும், நற்றிணை நானூறும், புறநானூறும், ஐங்குறுநூறும், பதிற்றுப்பத்தும், நூற்றைம்பது கலியும், எழுபது பரிபாடலும், கூத்தும், வரியும், சிற்றிசையும், பேரி சையுமென்று இத்தொடக்கத்தன. அவர்க்கு நூல்

அகத்தியமும் தொல்காப்பியமு மென்ப. அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத்தெண்ணூற் றைம்பதிற்றியாண்டு என்ப. அவர்களைச் சங்கமிரீ இயினார் கடல் கொள்ளப்பட்டுப் போந்திருந்த முடத் திருமாறன் முதலாக உக்கிரப் பெருவழுதியீருக நாற்பத்தொன்பதின்ம ரென்ப. அவருட் கவியரங் கேறினார் மூவர் பாண்டிய ரென்ப.

அக்காலத்துப் பாண்டியனாடு பன்னீரியாண்டு வற்கடஞ் சென்றது. செல்லப் பசிகடுகுதலும் அர சன் சிட்டரையெல்லாம் கூவி "வம்மின், யான் உங் களைப் புறந்தரகில்லேன்; என் தேயம் பெரிதும் வருந்துகின்றது; நீயிர் போய் நுமக்கறிந்தவாறு புக்கு, நாடுநாடாயின ஞான்று என்னை யுள்ளி வம் மின்" என்றான். என அரசனை விடுத்து எல்லாரும் போயின பின்றைக் கணக்கின்றிப் பன்னீரியாண்டு கழிந்தது. கழிந்த பின்னர் நாடு மலிய மழைபெய் தது. பெய்த பின்றை அரசன் இனி நாடு நாடா யிற்றாகலின் நூல் வல்லாரைக் கொணர்க என்று எல்லாப் பக்கமும் ஆட் போக்க, எழுத்ததிகாரமுஞ் சொல்லதிகாரமும் வல்லாரை எங்கும் தலைப்பட்டுக் கொணர்ந்து, பொருளதிகாரம் வல்லாரை எங்குந் தலைப்பட்டிலே மென்றுவந்தார். வர, அரசனும் புடைபடக்கவன்று "என்னை? எழுத்துஞ் சொல்லும் ஆராய்வது பொருளதிகாரத்தின் பொருட்டன்றே! பொருளதிகாரம் பெறேமெனின் இவை பெற்றும் பெற்றிலேம்" என்று சொல்லாநிற்ப, மதுரை ஆல வாயில் அழனிறக் கடவுள் சிந்திப்பான். "என்னை

பாவம்! அரசற்குக் கவற்சி பெரிதாயிற்று. அது தானும் ஞானத்திடையதாகலான் யாம் அதனைத் தீர்க்கற்பாலம்" என்று இவ்வறுபது சூத்திரத்தையுஞ் செய்து மூன்று செப்பிதழகத்தெழுதிப் பீடத்தின் கீழிட்டான்.

இட்ட பிற்றை ஞான்று தேவர்குலம் வழிபடுவான் தேவர் கோட்டத்தை எங்கும் துடைத்து நீர் தெளித்துப் பூவிட்டுப் பீடத்தின் கீழ்ப் பண்டென்றும் அலகிடாதான் அன்று தெய்வக் குறிப்பினான் அலகிடுவானென்று உள்ளங் கொளீஇ அலகிட்டான். இட்டாற்கு அவ்வலகினோடும் இதழ் போந்தன. போதரக் கொண்டு போந்து நோக்கினாற்கு வாய்ப்புடைத்தாயிற்றோர் பொருளதிகாரமாய்க் காட்டிற்று. காட்டப் பார்ப்பான் சிந்திப்பான்; "அரசன் பொருளதிகாரமின்மையிற் கவல்கின்றானென்பது பட்டுச் செல்லா நின்றமையாற் நம் பெருமானருளிச் செய்ததாகும்" என்று, தன் அகம் புகாதே கோயிற் றலைக்கடைச் சென்று நின்று கடைகாப்பார்க் குணர்த்த, கடைகாப்பார் அரசற்குணர்த்த அரசன் புகுதருக என்று பார்ப்பானைக் கூவச் சென்று புக்குக் காட்டக் கொண்டு நோக்கி, "இது பொருளதிகாரம்! நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச்செய்ததாகற்பாலது" என்று, அத்திசை நோக்கித் தொழுது கொண்டு நின்று, சங்கத்தாரைக் கூவுவித்து, "நம் பெருமான் நமது இடுக்கண் கண்டு அருளிச்செய்த பொருளதிகாரம்! இதனைக் கொண்டுபோய்ப்

பொருள் காண்மின்" என அவர்கள் அதனைக் கன்மாப் பலகை ஏறியிருந்தாராய் வழி, எல்லாரும் தாம்தா முரைத்த உரையே நன்றென்று சில நாளெல்லாஞ் சென்றன. செல்ல நாம் இங்ஙனம் எத்துணை யுரைப்பினும் ஒருதலைப்படாது; நாம் அரசனுழைச் சென்று நமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டுமென்று கொண்டு போந்து, அவனாற் பொருளெனப்பட்டது பொருளாய், அன்றெனப் பட்டது அன்றாயொழியக் காண்டுமென எல்லாரும் ஒருப்பட்டு அரசனுழைச் சென்றார். செல்ல, அரசனும் எதிர் எழுந்து சென்று, "என்னை நூற்குப் பொருள் கண்டீரேல்" என, "அது காணுமாறு எமக்கோர் காரணிகனைத் தரல்வேண்டும்" எனப் போமின் நுமக்கோர் காரணிகன் எங்ஙனம் நாடுவேன்? நீவிர் நாற்பத்தொன்பதின்மராயிற்று. நுமக்கு நிகராவார் ஒருவர் இம்மையினின்றே என்று அரசன் சொல்லப்போந்து பின்னையும் கன்மாப்பலகை ஏறியிருந்து, "அரசனும் இது சொல்லினன். யாங்காரணிகனைப் பெறுமாறு என்னை கொலென்று சிந்திப் புழிச் சூத்திரஞ் செய்தான் ஆலவாயி லவிர்சடைக் கடவுளன்றே! அவனையே காரணிகனையும் தரல்வேண்டுமென்று சென்று வரங்கிடத்தும் என்று சென்று வரங்கிடப்ப, இடையாமத்து, "இவ்வூர் உப்பூரி குடிகிழார் மகனுவான் உருத்திர சன்மன் என்பான் பைங்கண்ணன், புன்மயிரன், ஐயாட்டைப்பிராயத்தன், மூங்கைப்பிள்ளை உளன், அவனை அன்னனென்றிகழாது கொண்டுபோந்து

ஆசனமேலிரீஇக் கீழிருந்து சூத்திரம் பொருளுரைத்தாற் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்க்கும் மெய்யாயின் உரைகேட்டவிடத்து; மெய்யல்லா உரைகேட்டவிடத்து வாளா இருக்கும். அவன் குமாரதெய்வம்; அங்கோர் சாபத்தினாற் றோன்றினான்" என முக்காலிசைத்த குரல் எல்லார்க்கும் உடன்பாடாயிற்றாக, எழுந்திருந்து தேவர் குலத்தை வலங்கொண்டு போந்து, உப்பூரி குடிகிழாருழைச் சங்கமெல்லாஞ் சென்று இவ்வார்த்தையெல்லாம் சொல்லி, ஐயனாரை உருத்திரசன்மனைத் தரல் வேண்டுமென்று வேண்டிக் கொடுபோந்து, வெளிய துடீஇ, வெண்பூச் சூட்டி, வெண்சாந்தணிந்து, கன்மாப்பலகையேற்றி, இரீஇக்கீழிருந்து சூத்திரப் பொருளுரைப்ப, எல்லாரும் முறையே உரைப்பக் கேட்டு வாளா இருந்து, மதுரை மருதனிள நாகனார் உரைத்தவிடத்து ஓரோ வழிக் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்பப் பின்னர்க் கணக்காயனார் மகனார் நக்கீரனார் உரைத்தவிடத்துப் பதந்தொறுங் கண்ணீர் வார்ந்து மெய்ம்மயிர் சிலிர்ப்ப இருந்தான். இருப்ப ஆர்ப்பெடுத்து மெய்யுரை பெற்றாம் இந்நூற்கென்றார்.

அதனால் உப்பூரிகுடிகிழார் மகனார் உருத்திர சன்மனாவான் செய்தது இந்நூற் குரையென்பாருமுளர்; அவர் செய்திலர், மெய்யுரை கேட்டாரென்ப. மதுரை ஆலவாயிற் பெருமானடிகளாற் செய்யப்பட்ட நூற்கு நக்கீரனால் உரைகண்டு குமார

சுவாமியாற் கேட்கப்பட்டதென்க. இனி உரை வந்தவாறு சொல்லுதும்.

மதுரைக் கணக்காயனுர், மகனுர் நக்கீரனுர், தம் மகனுர் கீரங்கொற்றனுர்க் குரைத்தார். அவர் தேனூர்கிழார்க் குரைத்தார். அவர் படியங்கொற்றனுர்க் குரைத்தார்; அவர் செல்வத்தாசிரியர் பெருஞ்சுவனுர்க் குரைத்தார்; அவர் செல்லூராசிரியர் ஆண்டைப்பெருங்குமாரனுர்க் குரைத்தார்; அவர் திருக்குன்றத்தாசிரியர்க் குரைத்தார்; அவர் மாதவளனுர் இளநாகனுர்க் குரைத்தார்; அவர் முசிறியாசிரியர் நீலகண்டனுர்க் குரைத்தார். இங்ஙனம் வருகின்றது இவ்வுரை.

# 5. எழுத்தின் வரலாறு

மனித சரித்திரத்தில் எழுத்துகள் ஆரம்பிப்பதற்குச் சில காரணங்கள் உண்டு. மக்கள் தமது ஆயுதங்களையும் ஆடு மாடுகளையும் மட்பாத்திரங்களையும் காட்டும் அடையாளங்களை இடுதல், எண்ணங்களை அண்மையில் இல்லாதவர்களுக்கு அறிவித்தல் முதலியன அவற்றுள் தலைமையான காரணங்களாகும்.

ஒவ்வொரு மக்கட் குழுவினரதும் பேச்சிற் காணப்படும் ஒலிகளைக் குறிக்கும் வடிவங்கள் எழுத்து எனப்படும். ஒரு மொழியில் எத்தனை தனி ஒலிகள் காணப்படுகின்றனவோ அத்தனை எழுத்துகளே அதற்கு உண்டு. பல நூற்றாண்டுகளாக ஒரு மொழியின் ஒலிகள் மாறாமல் இருத்தல் அரிது. ஒலிகள் மாறுபடவே பழைய எழுத்துகளின் வடிவங்கள் பயன் அற்றுப் போகின்றன; புதிய எழுத்துகள் உண்டாகின்றன. ஒரு எழுத்தே பலவகையான ஒலிகளை உச்சரிக்க வழங்கப்படுவதும் உண்டு. அவ்வொலிகளைக் குறிக்கத்தக்கதாக அவ்வெழுத்து மாற்றமடைவதும் உண்டு. இவை போன்ற காரணங்களால் எழுத்துகள் காலத்துக்குக் காலம் மாறுபடுகின்றன.

ஆங்கில எழுத்துகள் இலாத்தின் எழுத்துகளைப் பின்பற்றி எழுதப்பட்டன. இலாத்தின் எழுத்துகள் கிரேக்க எழுத்துகளைப் பார்த்துச் செய்

யப்பட்டன. கிரேக்க எழுத்துகள் பொனீசிய எழுத்துகளிலிருந்து பிறந்தன. பொனீசிய எழுத்துகள் ஆப்பெழுத்துகளிலிருந்து தோன்றின. ஆப்பெழுத்துகள் சித்திர எழுத்துகளின் திரிபு.

ஆதி எழுத்துகள் சித்திர வடிவாக இருந்தன. அவ்வெழுத்துகளின் பிறப்பிடம் எகிப்து. எழுதும் இலகுவை நோக்கி அவ்வெழுத்துகள் சில மாற்றமடைந்தன. களிமண் தட்டில் சதுரமான தூலிகைகளால் எழுதப்பட்டமையால் அவ்வெழுத்துகள் ஆப்பின் வடிவைப் பெற்றன. ஆகவே அவ்வெழுத்துகள், ஆப்பெழுத்துகள் எனப்பட்டன. இவ்வாப்பெழுத்துகளைப் பின்பற்றியே பொனீசியர் எழுதினர். மக்கள் நாகரிகமுறாத காலத்தில் மொழி சித்திர முறையாகவே எழுதப்பட்டது. காலப்போக்கில் சித்திர எழுத்துகள் பலவகை மாற்றங்களடைந்தன. அதனால் பிற்கால எழுத்துகள் சித்திரங்களின் வடிவை இழந்தன.

எகிப்திலே சித்திர எழுத்து வழங்கிய காலத்தில் உச்சரிப்புக்கு ஏற்ப எழுதப்படும் எழுத்துகளும் இருந்தன. உச்சரிப்பு முறைக்கு ஏற்ற அவ்வெழுத்துகளும் சித்திர எழுத்துகளின் திரிபு என்று ஆராய்ச்சிகாரர் கூறுகின்றனர். சித்திர எழுத்துகள் கண்ணுக்குப் புலப்படும் பொருள்களின் வடிவங்கள் அல்லது குறிகளாயிருந்தன. வடிவமில்லாத செய்கை குணம் முதலியவற்றைக் குறிக்குமிடத்துச் சித்திர எழுத்துகளோடு உச்சரிப்பு முறைக்கேற்ற சொற்கள் வைத்து எழுதப்பட்டன. இக்காரணத்

திலேயே இருவகை எழுத்துகளும் ஒரு காலத்தில் வழங்கலாயின.

எழுத்தை உண்டாக்குவதற்குப் போதிய நாகரிகமும் எண்ணங்களின் வளர்ச்சியும் வேண்டும். இந்நிலைமையை அடைந்த மக்களே எழுத்துகளை உபயோகித்தனர். ஒரு பொருளை உணர்த்த வரிவடிவான ஒரு குறியீட்டை உபயோகித்தலே முற்கால எழுத்தாகும். பின் தனித்தனி ஒலிகளுக்கு எழுத்துகள் ஏற்பட்டன. இவ்வெழுத்துகள் உயிர், மெய் என இரு பிரிவில் அடங்கும்.

நாம் அறிந்துள்ள மொழிகளை எல்லாம் நாலு அல்லது ஐந்து ஆதி மொழிகளின் கூட்டங்களாகப் பிரிக்கலாம். இவை வெவ்வேறு வகையாகக் காணப்பட்டாலும் ஆதியில் சித்திர எழுத்துகளாக இருந்தன. அவ்வெழுத்துகளும், சீன, மெக்சிக்க, யூக்காற்றன், மத்திய அமெரிக்க எழுத்துக்களும் எகிப்திய எழுத்துக்களே. சீன மெக்சிக்க எழுத்துக்களும் அவ்வெழுத்துக்களுமே ஆதியில் வியாபகம் அடைந்திருந்தன. அவ்வெழுத்துகள் பொனீசிய எழுத்துகளாயின. ஐரோப்பிய எழுத்துகள் பொனீசிய எழுத்திலிருந்து பிறந்தன.

திருத்தமான சித்திர எழுத்துகளிலும் சில குறைபாடுகள் உண்டு. அவை எண்ணில் அதிகம் இருந்தமையின் அவற்றை ஞாபகத்தில் வைத்திருத்தல் மிகுந்த சிரமமாக விருந்தது. எழுத்தின் உபயோகம் அதிகப்பட்ட காலத்தில் அவை குறுக்கி எழுதப்பட்டன. இதனால் அவை பழைய வடிவி

னின்றும் மாறுபட்டன. ஆகவே, சித்திர சம்பந்தமான முதன்மையை அவை இழக்கலாயின. எண்ணில் மிகுதிப்பட்ட எழுத்துகளைப் பயில்வது இலகுவன்று. சித்திர எழுத்துகளால் எல்லா இலக்கண முடிவுகளையும் காட்ட இயலாது. சொற்கள் வைக்கப்படும் முறைகளைக்கொண்டே எழுவாய் செயப்படு பொருள் ஆதியவற்றை அறியவேண்டியிருந்தது. சில சமயங்களில் சொற்களுக்கிடையில் உள்ள தூரத்தைக்கொண்டும் அவற்றை அறிய வேண்டியிருந்தது.

எச்சமூகத்தினராவது வேண்டுமென்று எழுத்துகளை மாற்றமாட்டார்கள். இரண்டு நாகரிகங்கள் சந்தித்து ஒன்றை ஒன்று ஏற்றுக்கொள்ளும் போது இவ்வகையான மாறுதல்கள் உண்டாகும். இதனால் தாழ்ந்த நிலையிலுள்ள சமூகம் முன்னேற்றமடையும். அப்பொழுது அச்சமூகத்தினர் புதிய பெயர்களுக்கு அப் பெயர்கள் சம்பந்தமான பெயர்களை உண்டாக்குவார்கள். உரோமர் தாமறியாதிருந்த யானைக்கு லூகானிய எருது எனப் பெயரிட்டு எழுதினார்கள். தாழ்ந்த நாகரிகமுடையவர்கள் சித்திர எழுத்துக்குமேல் அறியாமல் இருப்பார்களானல், தாம் எழுத விரும்பிய பெயரின் உச்சரிப்பைக் கொடுக்கக்கூடிய பழைய குறிகளால் எழுதுவர். சில பொருள்களின் வடிவங்களை எழுதி அவற்றின் பெயர்களின் முதல் அசை அல்லது இரண்டசைகளைச் சேர்த்து உச்சரிக்குமிடத்து கருதிய பெயரின் உச்சரிப்புத் தோன்றுதல் அம்

முறையாகும். கத்தரிக்காயின் வடிவையும் ஒரு கோலின் வடிவையும் எழுதி கத்தரிக்கோல் என்று உச்சரித்தல் இதற்கு உதாரணமாகும்.

சீன மொழியில் எண்ணில்லாத எழுத்துகள் இருக்கின்றன. அவை எல்லாம் ஆதியில் சித்திர எழுத்துகளாயிருந்தன. ஆனால் அவைகளின் ஆதிப் பொருள்கள் சிறிதளவில் மாத்திரம் அறியக்கிடக்கின்றன. அக்குறிகள் சூரியன் (வட்டமும் உள் ஒரு புள்ளியும்) சந்திரன் (பிறையும் உள்ளே ஒருகீறும்) மழை (கவிந்த அரை வட்டத்துள் துளிகள்) மலை (ஒன்றன் பக்கத்தில் ஒன்றாக மூன்று சிகரங்கள்) முதலிய இவை போன்ற இயற்கைப்பொருள்களைக் குறிக்கின்றன. பின் இவை ஒன்றோடு ஒன்று இணைக்கப்படுகின்றன. கண்ணுக்குப் பக்கத்தில் துளியை இட்டால் கண்ணீர் என்று பொருள்படும். இவை எல்லாம் சித்திர எழுத்துகள். ஆதியில் எண்ணங்களை மாத்திரம் உணர்த்துவனவாயிருந்து இப்பொழுது உச்சரிப்பு முறையில் மாத்திரம் பயன்படும் சொற்களும் சீன மொழியில் இருக்கின்றன. சீன மொழியிலுள்ள ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு சொல்லைக் குறிக்கும்.

ஆப்பெழுத்து பாரசீகம், சின்ன ஆசியா, பபிலோன் முதலிய தேசங்களில் வழங்கிற்று. ஆப்பெழுத்திற் சில எழுத்துகள் சித்திர எழுத்துகளே என அவை தெளிவாகக் காட்டுகின்றன. இவ்வெழுத்து பபிலோனிய செமத்திக் மொழி வழங்கிய மக்களுக்குரியதன்று. பபிலோனியர் அதனைச்

செமத்திக் மக்களுக்கு முற்பட்ட சுமேரிய சாதியாரிடமிருந்து கற்றனர்.

ஆப்பெழுத்துகள் அசீரியாவிலும் பபிலோனிலுமிருந்து சுமேரியரது அல்லது பபிலோனியரது மொழிகளை வழங்காத பிறநாடுகளிற் பரம்பின. ஆசியாவிலும் கிறீத் முதலிய ஈஜியன் தீவுகளிலும் இவ்வகையான எழுத்துச் சாசனங்கள் காணப்படுகின்றன. இவ்வாறு வழங்கிய மொழி கித்தைத்தி (Hittite) மொழி எனப்படும். கி. மு. 800 வரையில் எகிப்திய எழுத்துகள் போன்ற ஒரு வகை எழுத்து கித்தைத்தியில் வழங்கிற்று. கிறீத்திற் காணப்பட்ட மைசீனிய எழுத்துகள் எகிப்திய மட்பாத்திரங்களிற் காணப்படும் எழுத்துகள்போல் இருக்கின்றன.

புராதன சாதியினர் யாவரும் தங்கள் எழுத்து உற்பத்திக்குக் கடவுள் சம்பந்தங் கூறினர். அசீரிய நூல் ஒன்றில் நேபோ என்னும் கடவுள் அரசருக்கு ஆப்பெழுத்தை அருளிச் செய்தார் என்று பொறிக்கப்பட்டிருக்கின்றது. சமஸ்கிருதம் எழுதப்படும் எழுத்து தேவர்நகரில் உள்ளது என்னும் பொருள்பட தேவநாகரி (தேவநகரி) எனப்பட்டது. எகிப்திய எழுத்துக்கு இடப்பட்ட பெயரின் பொருள் தேவர் எழுத்தை எழுதுவது என்று பொருள். இவ்விதமான கொள்கை எச்சாதியாருக்கிடையில் வேரூன்றி யிருந்ததோ அவர்கள் எழுத்து முறைகளை மாற்ற விரும்பமாட்டார்கள். இன்று சமயகுருமார் பழைய மொழிகளில் நம்பிக்கை

வைத்துக் கொண்டிருப்பது இதற்கு உதாரண மாகும்.

மொழிகள் இந்து ஐரோப்பியம், செமத்திக், துராவிடம் என்று மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கப்படும். ஐரோப்பிய மொழிகள் ஏறக்குறைய எல்லாம் இந்து ஐரோப்பிய இனத்தைச் சேர்ந்தன.

பொனீஸியரைப் பின்பற்றிக் கிரேக்கர் எழுத்துகளை வலப்பக்கமிருந்து இடப்புறமாக எழுதினர். இடம் இருந்து வலம் எழுதும் முறை பிற்காலத்தில் ஏற்பட்டது. இடைக்காலத்தில் எழுத்துக்கள் வலமிருந்து இடமும், பிற்காலத்தில் இடமிருந்து வலமு மாக எழுதப்பட்டன.

1921-ம் வருடம் சிந்துநதிப் பள்ளத்தாக்கு களில் ஹரப்பா மகஞ்ஜொதாரோ என்னும் நகரங்கள் அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்டன. அவ்விடங்களில் வழங்கிய எழுத்துகள் பொறிக்கப்பட்ட பொருள்கள் அகப்பட்டன. அவ்வெழுத்துகள் சீன எழுத்துகளைப்போலக் காணப்படுகின்றன. ஒவ்வொரு எழுத்தும் ஒவ்வொரு சொல்லைக் குறிக்க வழங்கப்பட்டிருக்கின்றது. இவ்வெழுத்துகளிலிருந்தே தமிழ் எழுத்துகள் விருத்தியடைந்திருக்கின்றன. அசோக லிபி எனப்படும் எழுத்துகளும் சிந்துநதிப் பள்ளத்தாக்கு எழுத்துகளினின்றும் பிறந்தவை என்று ஆராய்ச்சி வல்லார் கூறுகின்றனர்.

# 6. பழந்தமிழர் போர்முறை

## *நிரைகவர்தலும் நிரைமீட்டலும்

ஒரு வேந்தன் பிறிதோர் அரசனோடு போர் செய்யக் கருதினன். கருதித் தனது படைத்தலை வரையும் போர் நிலத்தைக் காத்து நின்றோரையும் அழைத்துப் பகைவரின் நிரைகளைக் கவர்ந்து வரும்படி பணித்தான். அவ் வேலை மேற்கொண்ட வீரக்கழலைக் காலிலே புனைந்த மறவர் "அரசே! பகைவரது ஆநிரைகள் விடியற்காலத்தே நின் வாசலிடத்தனவாம்" எனக் கூறிச்சென்று மகிழ்ச்சிக்குரிய இச்செய்தியைப் போர்வீரர்க்குணர்த்தினர். போரின்மையாற் றினவு கொண்டு "மலையேறிக் குதித்தேனும் உயிர் விடுவோம்" எனக் கவன்றிருந்த மறத்தொழில் மிக்கார் இந்நற்செய்தியைச் செவிக்கொண்டு அகமும் முகமும் மலர்ந்து ஆனந்தத்தாண்டவஞ் செய்தனர். பகைவரது ஆநிரை நிற்கும் இடம் முதலியவற்றை அறிதற்கு அரசனது ஒற்றர் சிலர் மாறுவேடமிட்டுச் சென்றனர்.

போர் வீரருட் சிலர் இருள் சூழ்ந்த மாலைக் காலத்துப் பாக்கத்தே சென்று முற்றத்தின்கண் முல்லைமலரையும் நாழியிலிட்ட நெல்லையும் தூவித்

*இக்கட்டுரை புறப்பொருள் வெண்பா மாலையிலுள்ள வெட்சி கரந்தை என்னும் பகுதிகளின் வசன நடையாகும்.

தெய்வத்தைப் பரவிக் கைகூப்பித் தொழுது நற்
சொற் கேட்க நின்றனர். அஞ்ஞான்று அவ்விடத்
துள்ளாள் மாது ஒருத்தி, "பெரிய கண்ணையுடைய
பசுவைக் கொண்டுவா" எனக் கூறினள். நற்சொற்
கேட்டு வந்தோர் தாம் கேட்டதைப் படைத் தலை
வர்க் குணர்த்தலும் அன்னோர் அதனை அறிவரால்
ஆராய்ந்து நன்றெனக் கொண்டனர். கொண்டு
பருக்கைக் கற்கள் செறிந்ததும், சில்வண்டுகள்
ஒலிப்பதுமாகிய காட்டு வழியே செல்லவேண்டி
ஆர்ப்பரித்துக் காலிடத்தே செருப்புத் தொட்ட
னர்; முடியிடத்தே வெட்சிப்பூச் சூடினர்; துடி
கறங்கிற்று.

இஃதிவ்வாறாக, பகைவரது மணிகள் கட்டிய
நிரைகள் நிற்கின்ற காட்டிடத்துள்ள காரி என்னும்
புள் தனது கடிய குரலால் அவர்க்கு வரும் கேட்
டினை முன்னர் அறிவித்தது. அதனைச் செவிக்
கொண்ட நிரை காவலர் தமக்கு நேர்வதோர் ஏதம்
உண்டென ஓர்ந்து ஏந்திய விற்களுடன் இமை
கொட்டாது நிரைகளைக் காத்து நின்றனர்.

சிங்கக்கொடியையும், கிளியையும், கலைமானை
யும், பேய்மிக்க படையினையுமுடைய கொற்றவையின்
கொடியை முன்னே உயர்த்தியவர்களாய், கூற்று
வர் குழுவினை ஒத்த வெட்சிவீரர், கழுகும், பருந்
தும் பின்னே படர்ந்து செல்ல, இருமல் தீர்க்கும்
மருந்துடையவர்களாய், வில்லாளர் காவல் செய்வ
தும் மூங்கில் அடர்ந்த மலைச்சாரலிடத்ததுமாகிய
மாற்றூர் நிரையினைக் கவரும்பொருட்டுக் கடிதேகி

னர். முன் சென்ற ஒற்றர் பசுக்கள் நின்ற இடமும், அவற்றின் அளவும், அவற்றைப் புறங்காத்து நின்ற படையின் அளவும் ஆராய்ந்து நள்ளிருளில் வந்து சேனைத்தலைவர்க் குணர்த்தினர்.

பகைவர் நிலையினை நன்கறிந்துகொண்ட வெட்சிவீரர் மூங்கில் செறிந்த மலைச்சாரலிடத்தே, நள்ளிருளிற் பதுங்கியிருந்து தருணம் பார்த்து ஒய்யெனக் கிளம்பி நிரைகாத்து நின்ற வில்லாளரை வீழ்த்தி நிரையினை அடித்துச் சென்றனர். செல்லுமிடத்து நிரையினைப் பறிகொடுத்தார் சிலர் அபிமானமிக்கவர்களாய்ப் பின் தொடர்தலும், அன்னோரைப் பின்னணியத்தார் பொருது வீழ்த்த முன்னணியத்தார் நிரைகளை வருத்தமின்றிக் கடத்திச் சென்றனர்.

அரசன் வெட்சிவீரர் கொணர்ந்த நிரையினை நிமித்தம் பார்த்துத் தப்பா வகை சொன்ன அறிவுடையோர்க்கும், துடிகொட்டும் புலையனுக்கும், பாணிச்சிக்கும், பாணனுக்கும் இன்னும் தமக்கு வேண்டிய பிறர்க்கும் பகுத்தளித்தான்; தமது உயிரைப் பொருட்படுத்தாது பகைவர் ஊரிற் சென்று ஒற்றிவந்தார்க்கும், நிமித்தம் அறிந்து சொன்ன அறிவுடையோர்க்கும், மேலதிகமாகச் சில பசுக்களைக் கொடுத்தான். போர்வீரர் கள்ளுண்ணும்போது, செருவிடத்துத் துடி கொட்டிய புலையனுக்குக் கள்ளினை மிகுதியாக வார்த்தனர். ஆபரணங்களை அணிந்த அழகிய பெண்கள் மணம்

பொருந்திய மாலைகள் பக்கத்தே அசையும்படி வள்ளிக்கூத்தாடினர்.

இஃதிவ்வாறாக, நிரை கவர்தற்பொருட்டுச் சென்ற வீரர்களது செய்தியை அறியாத வெட்டுவிச்சியர் கையைக் கன்னத்தே கொடுத்து வியாகுலம் மிகுந்தவர்களாயிருந்தனர். அந்நேரம் ஆநிரைகள் மன்றத்தே புகுந்தன. இடக்கண் துடிக்கப்பெற்ற வெட்டுவிச்சியர் தமது அன்பர்களைப் போக்கியவர்களாய் "எம்முடைய கணவர் தலையிலுள்ள மாலை வாழ்வதாக" என்று வாழ்த்தினர். மாற்றார் நிரையினைக் கவர்ந்து வந்த போர்வீரர்க்கு மரியாதை செய்தற்பொருட்டு ஊரார் மன்றத்தே பந்தரிட்டு ஆற்றலமைப் பாடி ஆட்டுமாமிசத்தைச் சுவைபெறச் சமைத்துப் பெருவிருந்தளித்தனர்.

## நிரை மீட்டல்

நிரையினைப் பறிகொடுத்தோர் அபிமானமிக்கவர்களாய் நிரை கவர்ந்தோரைப் பின்தொடர்ந்து அவரைச் செருவிடை வீழ்த்தி நிரையினை மீட்டுக் கொண்டு வருதலுமென்ப.

பகைவர் நிரைகளைக் கவர்ந்து சென்றனர். ஆன் காத்து நின்றோரில் இறவாது எஞ்சிய சிலர் ஓடோடியுஞ் சென்று தமது வேந்தற்கு அவமானம் மிக்க அச் செய்தியை உணர்த்தினர். அதனைச் செவிமடுத்த வேந்தன் மண்டுதீயென வெகுண்டு முடியிடத்தே கரந்தைப்பூவினைச் சூடினன். போர் வீரர் காலிடத்தே வீரக் கழலைக் கட்டினர், கூற்று

வரைப்போற் கோபித்துக் கரந்தை மலரை மயிர் மிசை மிலைந்து கொடிய வில்லைக் கையிடத்தே கொண்டனர். போர் செய்தற்கு ஏலாத சிறுவர், வயோதிபர், நோயாளர்களைத் தவிர ஏனையோர் சங்கும், கரிய கொம்பும், மயிலிறகு கட்டிய வாத்தியங்களும், பறையும் ஆர்ப்ப ஒளி விடுகின்ற வேல்களுடன் கல் நிறைந்த காட்டிடத்தே கூற்றுவரைப் போல வரிசையாகச் சென்றனர். செல்லுதலும் நிரை கவர்ந்தோர் பசுக்களை முன்னே செல்லவிட்டுத் தழைகள் மூடிய காட்டிடத்தே தலைமறைந்திருந்தனர். நிரை மீட்கச் சென்றோர் அவர்களைப் பதுக்கிடங்களினின்றும் வெளியேறச்செய்து அவர்களுடன் அச்சம் தருகின்ற போரைச் செய்தனர். முடிவில் நிரை கவர்ந்தோர் பின்னிட்டனர். நிரைகள் மீட்கப்பட்டன.

நிரை மீட்டோரிற் சில வீரர் மார்பிலும் முகத்திலும் பட்ட புண்களினின்றும் உதிரம் பெருகச் சாதிலிங்கஞ் சொரியும் மலையைப்போல் மீண்டனர். சிலர், விபர மறியாத சிறு பிள்ளைகளை ஒப்பப் பகைவரை வெட்டி வீழ்த்தியபின் நிரை கவர்ந்தோர் முதுகிட்டோடவும், தாம் போர்க்களத்தை விட்டுப் போகாராய்த் தனியே நின்றனர். தலையறுபட்டு உடற் குறையாய் நின்ற வீரர் சிலர் பிள்ளைத்தன்மையுடையராய் வாளை உறையினின்றும் வாங்கிக் கையிலேந்திப் போர்க்களத்தே வீரர்களுடன் நின்று அடிமேலடிவைத்தாடினர். சிலர், பகைவர் மார்பைப் பிளந்த வேல்களை அவர் மார்பு

களினின்றும் வாங்கி அவையிடத்தே குடர் மாலைகளைச் சுற்றித் துடி கறங்க ஆடாநின்றனர். பகைவர் படைவெள்ளம்போல வருதலும் அதனைக் குறுக்கிட்டு, "யாரொருவனே தாங்குவனுகப் பிறர் மதுவை அருந்துகின்றனர்" என ஓர் வீரன் புகன்றான்.

போரிடத்தே காரி என்னும் குருவி விலக்கவும் விலகாராய், வெட்சியாரை வென்று நிரையை மீட்டுவந்த வீரருக்கு அரசன் மருத நிலம் பலவுங் கொடுத்து வரிசை செய்தான். சிலருக்கு * ஏனுதி, காவிதி முதலிய பட்டங்களை யளித்தான். அவ் வரிசைகளைப் பெற்ற வீரர் வேந்தனை வாழ்த்தினர். அரசன் ஒருவன் பிறிதோர் அரசனின் மகளைக் கேட்டவிடத்து அவன் கொடுக்க மறுப்பின் இவ்வகையான போர்கள் நடப்பது சகசம். இங்ஙனம் பெண் மறுத்துக் கூறுதலை "மகண்மறுத்து மொழிதல்" என இலக்கியங்கள் கூறும். பாலை நிலத்தேயுள்ள மறக்குடித் தலைவர்கள் பெரும்பாலும் முல்லை நிலத்திலுள்ள நிரைகளைக் கவர்ந்துவந்து கள்ளுக்கு விலையாகக் கொடுப்பர்.

"யானை தாக்கினும், அரவு மேலே ஊர்ந்து செல்லினும், இடியேறு இடிப்பினும், அஞ்சாத சூற்கொண்ட மகளிரையும், கொள்ளையடிக்கு முனைவினையுமுடைய வாட்போர் செய்யும் மறக்குடியிற் பிறந்த மறவன் குறிவைத்த மிருகத்தைத் தப்பாமற் பிடிக்கும் வேட்டை நாயைப்போலக் காவலை

* ஏனுதிப் பட்டத்துக்கு மோதிர மளித்தல் மரபு.

யுடைய பகைவரது ஊரின்கண் சென்று விடியற் காலத்தே கொண்டுவந்த பசுக்களைக் கள்ளுக்கு விலையாகக் கொடுத்து வீட்டிலே சமைத்த கள்ளினைப் பருகிக் கிடாயை உரித்துத் தின்று ஊரின் நடுவேயுள்ள மன்றிலே மத்தளங் கொட்ட இடத் தோளை வலப்புறத்தே வளைத்து நின்றாடுவான்." (பெரும்பாணாற்றுப்படை)

"கள் விற்கு மவள் இவன் பழங்கடன் கொடாமையிற், பின்கட் கொடாது மறுப்ப அது பொறாத வீரன் அந்நிலையே வில்லைக் கையிலேந்திப் புள் நிமித்தம் தன் கருத்திற்கு ஏற்பச் சேறலிற் பகைவர் நிரை கொள்ளுதலைக் கருதிப் போகுதலைச் செய்யும்; அங்ஙனம் போகுங்கால் தான் கைக்கொண்ட ஆளிக்கொடியை உயர்த்துக் கொற்றவையும் வில்லின் முன்னே செல்லுமன்றோ வென்க."

"பெரிய மலர்போலுங் கண்ணை யுடையாய்! நின் ஐயன்மார் அயலாரூர் அலறும்படி தலைநாளிற் கைக்கொண்டுவந்த நல்ல ஆநிரைகள், நயமில்லாத மொழியையும் நரைத்த நீண்ட தாடியையும் உடைய எயினரும் அங்ஙனம் மூத்த எயிற்றியருமாகிய இவர்கள் முன்றிலின்கண் ணின்றன." (சிலப்பதிகாரம் வேட்டுவரி)

நிரை கவர்தலும் நிரை மீட்டலும் தமிழரது முற்பட்ட காலத்துப் போர் ஒழுக்கங்களாகும். மக்கள் மாட்டையே செல்வமாகக் கொண்டிருந்த ஒரு காலத்து இவ்வகையான போரொழுக்கங்கள்

மிகுதியும் நிகழ்ந்தனவாதல் வேண்டும். நிரை கவரு வோர் முடியிடத்து வேட்சிப்பூவையும், நிரை மீட் போர் கரந்தைப்பூவையும் சூடுதல் மரபு. இக்கார ணம்பற்றி நிரை கவர்தல் வெட்சியென்றும் நிரை மீட்டல் கரந்தை என்றும் பெயர்பெறும்.

## வீரக் கல்

நிரை மீட்கு மிடத்துப் பலரும் ஆச்சரிய முறும் படி தமது வீரத்தைக் காண்பித்துப் படைமுகத்தே இறந்த வீரனுக்கு அவனுடைய பெயரும் ஊரும் ஆற்றலும் எழுதிக் கல் நடுவது பண்டையோர் வழக்கு. இவ்வழக்கினைப் பின்பற்றியே இறந்த வர் பொருட்டுப் பாடப்படும் பாடல்கள் "கல் வெட்டு" என வழங்குவதாகும். இறந்தவர்களைச் சமாதி செய்து ஆலயங்கள் எடுத்தலும் கல் நாட்டும் வழக்கைப் பின்பற்றியதெனக் கருத இடமுண்டு.

## கல் நடுதலின் விபரம்

வீரர் காட்டிற் சென்று இறந்த வீரனுக்கு நாட்டத் தகுந்த கல்லினைக் காண்பர். கண்டு அதற்கு நறும் புகை முதலியவற்றைக் காட்டி, எடுத்து, வாசம் பொருந்திய நீரினாலே மஞ்சன மாட்டி, வாவியிலும் முழுக்காட்டுவர். பின் மாலை தூக்கி, மணி ஒலித்து, மதுத் தெளித்து, மயிலிறகுஞ் சூட்டி, வீரன் பெயரை எழுதி, "வேற்போரை விரும் பினோனுக்கு இது உருவமாகுக" என்று கல்லினை

அழகுபெற நடுவர். நட்டபின் அக்கல்லின் நின்ற வீரனை எல்லோரும் வணங்கிக் கோயி லமைப்பர். போருக்குச் செல்லும் வீரர் அதனை வணங்கிச் செல்வர். அவ்வழியே செல்லும் பாணர் யாழினை மீட்டுப் பாடி அக்கல்லினை வழிபட்டுச் செல்வர்.

" கன்றுடனே கறவையையும் மீட்டுக்கொண்டு வந்து மறவரை யோட்டி நோக்கிய நெடுந்தகைக் குச் சிவந்த பூவுடைய கண்ணியுடனே அழகிய மயி லிறகைச் சூட்டிப் பெயரை எழுதி இப்பொழுதே கல்லை நட்டார்." (புறம்)

" ஊர் முன்னாகச் செய்யப்பட்ட பூசலின்கட் டோன்றிய வீரன்; தன்னுடைய ஊரின்கண் மிக்க நிரையைக்கொண்ட வீரர் எய்த அம்பினை விலக்கி வென்று அவர் கொண்ட ஆநிரையை மீட்டான். தோலுரித்த பாம்புபோலத் தானொருவனுமே யாகத் தேவருலகத்தின்கட் போயினன். அவனது உடம்பு காட்டுச்சிற்றியாற்றினது அரிய கரை யிடத்துக் காலுற நின்று நடுக்கத்தோடு சாய்ந்த விலங்கினை ஒப்ப அம்பாற் சலித்து அவ்விடத்து வீழ்ந்தது. புடைவையாற் செய்யப்பட்ட பந்தரின் கீழ் உயர்ந்த கீர்த்தி மிகவுந் தோன்றிப் பெயர் மேன்மையடைய நட்ட கல்லின்மீது மயிலினது அழகிய பீலி சூட்டப்பட்டது." (புறம் 200)

"கெடாத நல்ல புகழினையுடைய பெயர்களை எழுதி நட்ட கற்கள் முதுகிட்டுப் போனவரை இகழும்." (மலைபடுகடாம்)

"பட்டார் பெயரு மாற்றலு மெழுதி
நட்ட கல்லு மூதூர் நத்தமும்."
(சேரமான்பெருமாள்)

"நல்லமர் கடந்த நாணுடை மறவர்
பெயரும் பீடும் எழுதி அதர் தொறும்
பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்." (அகம்)

நடுகல் பெரும்பாலும் வீரர்களுக்கு நடுவதாயினும், நிரை மீட்டு அவிந்தார் பொருட்டு நடுதலே சிறப்பு.

# 7. *இசை மரபு

முன்னாளிலே இருந்த பாணர் முடியுடை வேந்தரை யும், குறுநில மன்னரையும் பாடிப் பொருள் பெற்ற னர். பின்னாளிலிருந்த திருநீலகண்டப் பெரும் பாணர், பாணபத்திரனார், திருப்பாணாழ்வாராகிய மூவரும் ஆண்டவனைப் பாடி அருள் பெற்றனர். பத்தாம் பதினோராம் நூற்றாண்டிலே இசைக் கலை இருந்த நிலைமையைக் கொங்குவேண்மாக் கதை யாலும் சீவகசிந்தாமணியாலும் ஒருவாறு அறிதல் கூடும்.

பிரமசுந்தர முனிவர்பால் இசைப் பயிற்சி பெற்ற உதயணன் கோடபதியென்னும் யாழை மீட்டு மதங்கொண்ட யானைகளை வயமாக்கினனென வும், அவன் தான் கற்ற இசைக் கலையைப் பிரச் சோதனன் மகளாகிய வாசவதத்தைக்குக் கற் பித்தானெனவும், யாழ்நலனாராய்தலில் இவனை யொப்பாரு மிக்காரு மிலரெனவும் பெருங் கதை யால் அறிகின்றோம். சீவகநம்பி காந்தருவதத் தையை வீணையால் வென்ற வரலாறு சிந்தாமணி யுட் கூறப்பட்டது. உதயணன் சீவகனாகிய இருவ ரது இசை வென்றியைக் கூறுமிடத்து, கொங்கு வேளும், திருத்தக்கதேவரும் இசை நூற்றுறைகள் சிலவற்றைக் குறிப்பிடுகின்றனர். இவ்விரு நூலி

---

* உயர்திரு. விபுலானந்த சுவாமிகள் எழுதியது.

னகத்தும் வீணை, யாழ் என்னும் மொழிகள் வேறுபாடின்றி வழங்கப்படுகின்றன. இவ்விரு நூலாசிரியரும் காட்டுகின்ற இசைப் புலமை இளங்கோவடிகளது இசைநூ லுணர்ச்சியை ஒத்ததன்று.

பன்னிரண்டாம் நூற்றாண்டிலே வாழ்ந்த சேக்கிழார் சுவாமிகளது காலத்திலே இசைக்கலை அருகி நின்றதெனினும் முற்றிலும் அழிந்துபோகவில்லை. தேவாரத்துக்குப் பண்ணடைவு வகுத்த பெண்மணி திருநீலகண்டப் பெரும்பாணர் மரபிலுதித்தவள். அவள் வகுத்த பண்முறை அன்று தொட்டின்றுவரையும் வழக்கிலிருந்து வருகின்றது. இந்நாளிலேயுள்ள ஓதுவார்மூர்த்திகளுட் சிலர் பழைய பண்முறையை ஓரளவிற்குக் கையாண்டு வருகின்றாரெனினும், கருநாடக சங்கீதத்தின் வழிப்பட்டு ஏழிசை யியல்பறியாது இசை யென்னும் மொழிக்கு இராகம் எனப் பொருள் கொண்டு இடர்ப்படுவாராயினர்.

பதின்மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்த சாரங்கதேவர் என்னும் பெரியார் தேவகிரி இராச்சியத்தில் சிம்மண இராச சபையில் சமஸ்தான வித்துவானாக விளங்கினார். இவரியற்றிய சங்கீத ரத்நாகரத்திலே தேவாரப் பண்கள் சிலவற்றினிலக்கணங் கூறப்பட்டிருக்கின்றது. "இவை தேவாரத்தினுட் கூறப்பட்டன"வெனச் சில இசை நூல் முடிபுகளைத் தமது நூலினுள்ளே இவர் சொல்லுகிறாராதலின் தென்னாட்டிற்குவந்து தேவாரப் பண்முறையைப் பயின்றுகொண்டாரென்

றெண்ண இடமுண்டு. இவர்க்கு மூந்நூறாண்டு பிற்பட்டவராகிய இராமாமாத்தியர் தாம் இயற்றிய சங்கீத ஸ்வர மேள கலாநிதியினுள்ளே தேவாரத்திலுள்ளனவும் பிற்காலத்தில் வழக்கு வீழ்ந்தனவுமாகிய இசைப் பெயர் சிலவற்றை எடுத்தாளுகின்றார். இக்காலத்தில் வழங்கும் இந்துஸ்தானி இசை நூல்களுள்ளும் தேவாரப் பண்ணின் பெயர் சில காணப்படுகின்றன. பதினான்காம் நூற்றாண்டிலேயிருந்த உரையாசிரியர் காலத்திலே பண்டை இசை மரபு ஓரளவிற்கு மறைந்து போயிற்று. குரல் துத்தம், கைக்கிளை உழை, இளி, விளரி, தாரம் என்னும் ஏழிசையும் வழக்கற்றுப் போகச் ச-ரி-க-ம-ப-த-நி என்னும் ஏழு சுரங்களும் வழங்குபவாயின. சிலப்பதிகார அரும்பத வுரையாசிரியர் காலத் திருந்ததிலும் பார்க்க அடியார்க்கு நல்லார் காலத்தி லிசைநூற் பயிற்சி குன்றியிருந்த தென்பதற்கு இவ்விருவரது உரையுமே சான்று பகருகின்றன. பதினைந்தாம் பதினாறும் நூற்றாண்டுகளிலே இசைக் கலை முற்றிலும் மறைவுற்றுக் கிடந்தது. பதினேழாம் பதினெட்டாம் நூற்றாண்டுகளிலே தஞ்சையிலிருந்து அரசுபுரிந்த நாயக்க அரசரும், மஹாராஷ்டிர அரசரும் இசை வல்லாரை ஆதரித்து இசைக் கலையை வளர்ப்பாராயினர். அச்சுதப்ப நாயக்கரிடத்து (கி. பி. 1572-1614) மந்திரியாராக விருந்த கோவிந்த தீக்ஷிதரின் குமாரர் வேங்கடமகி யென்பார் கி. பி. 1660-ம் ஆண்டளவிலே பண்டைத் தமிழிசை மரபினின்றும் பெரி

தும் வேறுபட்ட இசை மரபினை வகுத்துச் சதுர்த்தண்டிப் பிரகாசிகை யென்னும் வடமொழி நூலினை யாத்தமைத்தார். கருநாடக சங்கீதம் என வழங்கும் இசை மரபிலே வேங்கடமகியின் ஆணையே இன்றும் நடைபெற்று வருகின்றது. ஷாஜி மகாராசா (1687-1711) தாமும் இசை வல்லுநராகி இசை வல்லுநரைப் பெரிதும் ஆதரித்தல் மேற்கொண்டார். திருவாரூர்க்கிரிராச கவி இம்மன்னரது சமஸ்தான வித்துவான் ஆவார். கிரிராச கவியின் பௌத்திரரே தியாகராச ஐயரெனக் கீர்த்திவாய்ந்த பெரியார். விசயராகவ நாயக்கர் (1673) காலத்திருந்த துளசா மகாராசா (1763-1787) காலத்திருந்தவரும் இராமாயணக் கீர்த்தனஞ் செய்தவருமாகிய அருணாசலக் கவியும், எட்டையபுரம் சமஸ்தானத்திலிருந்த முத்துச்சாமி தீட்சிதரும் (1775), திருவாரூரிலே தோன்றிய சாமா சாஸ்திரியாரும் (1763) பிறரும் நமக்கு மிகவும் அணிமையான காலத்திலிருந்த இசைவல்லோராவர்.

# 8. மொழியின் சரித்திரம்

**மொழி** நூல் மனிதர் மொழிகளை ஆராய்ந்து கூறுகின்றது. மக்கள் தமது எண்ணங்களைப் பிறர்க்கு உணர்த்தும் அவாவினாலேயே மொழியைத் தோற்றுவித்தனர். மனிதர் ஒருவரோடு ஒருவர் அளவளாவிக் கூட்டமாக வாழ்கின்றனர். மக்களின் கூட்டு வாழ்க்கைக்குப் பொது உதவி அனுதாபம் என்பன அடிப்படையானவை. தன்னைப் பிறருக்கு விளக்குவதற்கும், பிறர் தன்னை விளக்குவதற்கும் பேச்சு இன்றியமையாதது. அறிவு வளர்ச்சியுறாத காலத்தே மனிதன் இதனை அறியாதிருந்தான் என்று கூற முடியாது. ஒரு காலத்தில் மொழி தோன்றவில்லை. அஞ்ஞான்று மனிதனின் எண்ணங்கள் நினைவளவிலேயே இருந்தன. ஒரு தனி மனிதன் மொழியை உண்டாக்கியிருக்கமாட்டான். ஒரு குழுவிலிருந்து பிரிந்தவன் நெடுங்காலத்தின் பின் மொழியை மறந்து பேசமாட்டாதவன் ஆகின்றான். எண்ணங்களின் இயல்பே பேச்சின் ஆரம்பமாகும்.

## மொழியின் தோற்றம்

கட்புலனாகும் பொருள்களின் வடிவங்களே ஆரம்பத்தில் எழுத்துகளா யிருந்தன. இவ்வகையினன்றி வேறு தன்மைகளால் எழுத்துகள் பிறக்க

மாட்டா. மரத்தின் சித்திரம் ஆரம்பத்தில் மரத்தைக் குறித்தது. பின்பு அது தடியையும் மரத்தினுற் செய்யப்பட்ட பொருள்களையும் குறித்தது. இரண்டு விரித்த சிறகுகள் பறப்பதைக் குறித்தன; பின்பு உயரத்தை உணர்த்தின.

பேசும்போது முகம் கை உடம்பு சத்தம் என்னும் நான்கும் தொழிற்படுகின்றன. ஆரம்ப மொழியில் சைகைகள் பெரும்பாலும் வழங்கின. அலைந்து திரியும் வெவ்வேறு கூட்டத்தினர் எதிர்ப்பட நேர்ந்தால் சைகைகளால் பேசுகின்றனர். ஊமரும் செவிடரும் இவ்வாறே பேசுவர். சத்தத்தின் உபயோகம் அறியப்பட்டபின் சைகைகள் கைவிடப்பட்டன.

சைகைகளைத் தொலைவிலும் மறைவிலும் நின்று காட்டுதல் இயலாது. இடையில் உள்ள பொருள்கள் ஒலியை மறைக்கமாட்டா.

ஆரம்பத்தில் எழுதப்பட்ட எழுத்துகள் பொருள்களின் வடிவங்கள் என அறிந்தோம். மொழியும் இதுபோன்ற முறையில் ஆரம்பிக்கப்பட்டது. ஆரம்பத்தில் பிறப்பிக்கப்பட்ட ஓசைகள் இயற்கை ஒலிகளைப் பின்பற்றியனவாகும். ஒலியைப் பின்பற்றும் வகை, விலங்குகளின் ஒலியைப் பின்பற்றுதல், மனிதரின் ஒலியைப் பின்பற்றுதல் என இருவகைப்படும். இரண்டு வகையாகத் தோன்றினும் இம்முறை கொள்கையளவில் ஒன்றே. அதிசயம் முதலிய ஒலிக் குறிகளே மொழியின் ஆரம்பமாகும். முகக் குறி, நிலை, சைகை முதலிய

நடிப்புகள் எண்ணங்களை வெளிப்படுத்தும். இவை போல எண்ணங்களை வெளிப்படுத்தும் ஓசைகளும் உண்டு. அவ்வகை ஓசைகளைச் செவிக்கொண்டவுடன் அவற்றின் பொருள்களை நாங்கள் உடனே விளங்கிக்கொள்கின்றோம். கோழி தனது குஞ்சுகளுககு அபாயத்தை உணர்த்துஞ் சத்தஞ் செய்கின்றது உடனே குஞ்சுகள் அதனை விளங்கி ஓடிப் பதுங்குகின்றன. மகிழ்ச்சி, அழுகை, வருத்தம், சிரிப்பு, அனுக்கம் முதலியவற்றுக்குரிய ஒலிகளைக் கேட்கும்போது அவை எவற்றைக் குறிக்கின்றன வென்று நாம் விளங்கிக்கொள்கின்றோம். அவ்வொலிகளின் பொருளை எவரும் நமக்கு விளக்கவேண்டியதில்லை. இவ்வகை அடிப்படையிலிருந்தே மொழி தோன்றிற்று. இம்முறை இன்று வரையில் கையாளப்பட்டு வருகின்றது.

எண்ணங்களை வெளியிடும் மார்க்கங்கள் எங்கள் வசம் இருக்கின்றன. அவை சிறிதளவோ பெரிதளவோ எம்மால் பயன்படுத்தப்படுகின்றன. நோவினால் எழும் ஒலியும், பொழுது போக்கிற் பிறக்கும் சிரிப்பும் பொருள் விளங்கக்கூடியனவாயிருப்பினும் பேசும் மொழி ஆகமாட்டா. அவை மற்றவர்களுக்கு நோவை அல்லது சிரிப்பை உணர்த்தும் பொருட்டுப் பிறப்பிக்கப்பட்டன வல்ல. ஒருவனது செருமல் மற்றவனது கவனத்தை இழுக்கின்றது. ஒருவனது கவனத்தை இழுப்பதற்குச் செருமினால் அல்லது வேறு ஒலியை எழுப்பினால் அவ்வொலி மொழி உற்பத்தியைச் சார்ந்த

தாகும். இவ்வகை ஒலிக் குறிகள் பல தலைமுறைக ளாக வந்தன. இயற்கையான இம்முறைகளைவிட் டுச் சில ஒலிக் குறிகளைக் கையாளத் தொடங்கிய ஞான்றே உண்மையான மொழி உண்டாயிற்று. சில ஒலிக் குறிகளை எல்லோரும் ஒரே காரணத்துக் காக வழங்கினர். அப்போதான் அவை தலைமுறை தலைமுறையாக வந்து ஒரு குழுவுக்கு உரியனவா யின. மதத்தினதும், கலைகளினதும் ஒற்றுமைகளி லும் பார்க்க மொழி ஒரு சமூகத்தை அதிகம் பிணிக்கின்றது.

## சொல் உற்பத்தியும், மொழி வளர்ச்சியும்

ஒவ்வொரு நாகரிக மக்களுக் கிடையிலும் பல கூட்டங்களுக்குரிய மொழிச் சொற்கள் கலந்து ஒரு மொழியாக வழங்குவதைக் காண்கின்றோம். ஒரு குழுவினர் சில காலங்களில் தம் முன்னோர் அறி யாத ஒரு மொழியை வழங்குகின்றனர்.

நாம் பார்க்கும் ஒவ்வொரு பொருளிலுமுள்ள ஒவ்வொரு விசேட குணம் நம்மைக் கவருகின்றது. நாம் பெரும்பாலும் பிராணிகளின் ஓசைகளை உற் றுக் கேட்கின்றோம். ஆங்கிலத்தில் குயிலுக்குக் கக்கு என்று பெயர். குயில் என்பதும் கக்கு என் பதும் அதன் ஓசை காரணமாகத் தோன்றிய பெயர்கள். இவ்வகையிற் றோன்றிய சொற்களை ஒவ்வொரு மொழியிலும் காணலாம். சில பிராணி களின் பெயர்கள் அவற்றின் நிறம் காரணமாக

ஆக்கப்பட்டிருக்கின்றன. சில பிராணிகளின் பெயர்கள் அவற்றின் வேறு தன்மைகளை உற்று நோக்கி ஆக்கப்பட்டுள்ளன. குதிரை, பாய்வதால் பரி என்றும், குதிப்பதால் குதிரை என்றும் பெயர் பெறும். ஒரு சிறப்புக் காரணத்தால் ஒரு பெயர் ஒரு பொருளுக்கு இடப்பட்டால் அச்சொல் அப் பொருளை மாத்திரம் குறிக்கும்; அக்காரணமுடைய வேறு பொருளைக் குறியாது. சொற்கள் உச்சரிப்பு வேறுபட்டு உற்பத்தி அறிய முடியாமல் வழங்கி னால் மூலச் சொற்கள் பரிகசிக்கத் தக்கனபோல் தோன்றும். இம்முறையாகவே மொழிக்குரிய சொற்கள் உற்பத்தியாகின்றன. மொழி உண் டான பின்பே சொற்கள் மாற்றம் அடைதல் இய லும். மொழி இவ்வாறு வளர்ச்சியடைகின்றது.

மனிதனை மற்றப் பிராணிகளோடு ஒப்பிடு மிடத்தில் அவன் தனிச் சாதியா யிருக்கின்றான். அதுபோல மனித மொழியும் சிறப்புத் தன்மை களால் தனிமையாகவே இருக்கின்றது. மனிதன் மொழியைப் படிப்படியாக விருத்திசெய்து இன் றைய நிலைக்குவர எத்துணைகாலம் பிடித்தது என்று அனுமானித்துக் கூறுதல் இயலாது. ஆரம்பகாலத் தில் முன்னேற்றம் தாமதப்பட்டது என்று கருதுவ தற்குப் பல காரணங்கள் உண்டு. ஆரம்பத்தில் அவிநய மொழியும், பின் அவிநயத்தோடு ஒலி கலந்த மொழியும் அதன்பின் இக்கால நிலைமையி லுள்ள மொழிகளும் தோன்றலாயின. மொழியில் அடங்கிய எல்லா ஒலிக் குறிகளும் தலைமுறை தலை

முறையாக வந்தன. அவை காலத்துக்குக் காலம் அதிகப்பட்டன. இது ஒரு குழு வேறு குழுக்களோடு உறவாடி அவைகளது மொழியிலுள்ள சொற்களைக் கையாளுதலால் ஏற்படுகின்றது.

மொழி உற்பத்திக்கு இயற்கையிலுள்ள ஆதாரங்கள் எவை என்று விளங்குகின்றது. ஒலிக்குறிகள் ஆரம்பத்தில் சிறியனவாயிருந்தன. அவை சொல் மூலங்கள் எனப்படுகின்றன. மூலங்கள் பிரிக்கக்கூடாத முழுக் குறிகள். ஒவ்வொரு மூலமும் ஒவ்வொரு பொருளைக் குறித்தது. பழைய மொழிகள் சொல் மூலங்கள் அளவில் இருந்தனவென்பது அனுமானிக்கத்தக்கது.

ஆதியில் ஒவ்வொரு கலையும் இலகுவான முறையில் ஆரம்பிப்பதுதான் பொது விதி. கலைகள் எல்லாம் மனிதனின் சத்திக்கேற்பப் படிப்படியாக விருத்தியடைகின்றன. ஆரம்ப மொழி இரண்டு தன்மைகள் உடையதாயிருக்கின்றது. சொல்லின் ஒரு பகுதி பொருளின் ஒரு பகுதியையும் மற்றது இன்னொரு பகுதியையும் விளக்கின. ஆரம்பத்தில் மனிதன் உண்டாக்கிய ஆயுதங்களுக்குப் பிடியும், குகை வீடுகளுக்கு முன் அறையும், பின் அறையும் இருக்கமாட்டா. இக் கொள்கைக்கு மொழியின் எல்லாக் கால வரலாறும் ஆதார மளிக்கின்றது. தொடக்கத்தில் தனிச் சொற்களே உண்டாக்கப்பட்டன. மொழியிலுள்ள சொற்களை ஆராய்வதால் நாம் அவற்றின் ஆரம்ப காலத்தை ஆராய்கின்றேம். மொழி உற்பத்தியைக் குறித்த ஆராய்ச்சி

நம்மைச் சொல் மூலங்களுக்குக் கொண்டுபோய் விடுகிறது.

ஆதிமொழி ஒலி முறையான குறிகளாயிருந்தது. இக் கொள்கை தக்க நியாயத்தோடு அங்கீகாரம் பெறுகின்றது. இக்காலச் சொற்களைப் போலவே ஆதிச் சொற்கள் உயிர் எழுத்தொலியையும் மெய்யெழுத்தொலியையும் மாறிவைத்து உச்சரிக்கப்பட்டன. அவ்வுச்சரிப்புகள் நாம் வழங்கும் ஒலிகளின் பகுதியாகக் கொண்டிருந்தன. எல்லா மொழிகளின் இயல்பும் இதுவே.

ஒவ்வொரு தனி ஒலியும் எழுத்தால் குறிக்கப்படுகின்றது. சிறப்பொலிகள் உயிரும் மெய்யுமாகும். ஒவ்வொரு மொழிக்கும் உச்சரிப்பு முறை தனியாக வுண்டு. சில ஒலிகள் சில மொழிகளுக்கு மாத்திரம் சிறப்பாக உண்டு. எழுத்து முறையாகப் பிரிக்கக்கூடிய ஒலிகளென்றும், பிரிக்கக்கூடாதன என்றும் இரண்டுவகை ஒலிகள் உண்டு. மிருகங்கள் பட்சிகளின் ஓசை மனிதரின் அழுகைபோன்றன. எழுத்து முறையாகப் பிரிக்கக்கூடாத ஒலிகளுக்கு உதாரணங்களாகும். சொற்களைப் பல கூறுகளாகப் பிரிக்கலாம். ஒவ்வொரு பொருத்தும் ஒவ்வொரு அசை எனப்படும். ஒவ்வொரு அசையும் உயிரதும் மெய்யதும் ஒலிகளால் ஆக்கப்பட்டன. அசைகள் பெரும்பாலும் ஒரு மெய் ஓசையோடு ஒரு உயிர் ஓசைபெற்றதாயிருக்கும். இவற்றில் ஏதாவது ஒன்று இல்லாமல் உச்சரிக்கப்படும் அசைகளும் சில மொழிகளில் உண்டு. ஆகவே எல்லாப்

பேச்சுக்குறிகளும் ஓரசையினவாய் அல்லது ஓரசை யையே திரும்பச் சொல்லும் குழந்தைகளின் பேச் சுப்போன்றனவாய் இருக்கும். ஆதியில் எவ்வெழுத் தொலிகள் இருந்தன என்று கூறுதல் வெறும் ஊகத்தைப் பொறுத்தது. ஆதியில் உயிரும் மெய்யு மாகிய ஒலிக் குறிகளே இருந்தன. மற்றவை பிற் காலத்திற் சேர்க்கப்பட்டன.

ஆதி மொழியின் ஒலிக் குறிகள் புலன்களால் அறியப்படும் குணங்களையும் செய்கைகளையும் குறிப் பனவாயிருந்தன. எங்கள் மொழியின் வரலாறு புலன்களால் அறியப்படும் பொருள்களின் பெயர்க ளாகவும் புலன்களாலறியப்படாத எண்ணங்களின் பெயர்களாகவும் மாறியிருக்கிறது.

நாங்கள் அநேக சொற்களை வழங்குகின்றமை யால் எழுவாய் பயனிலை முதலிய உறுப்புகளை வைத்து வசனங்களை எழுதுகின்றோம். இவ்வகையி லமையாத வசனங்களைச் சுருக்கு வசனங்களாகக் கருதுகின்றோம். எழுவாய் பயனிலையோடு கூடிய வசனங்களை எழுதுவதற்குச் சொற் பாகுபாடு வேண்டும். சொற் பாகுபாடென்பது பெயர் வினை குணம் என்பவை போன்றவற்றுக்கு இன்ன இன்ன சொற்கள்தான் உபயோகித்தல் வேண்டு மென்னும் வரையறை. இவ்வாறு வரையறுக்கப் பட்ட சொற்களை உரிய இடங்களில் வைக்க வசனம் உண்டாகும். சொற்களின் பிரயோகம் வரை யறுக்கப்படாத ஒரு காலத்தின் நிலைமையை அறிந்துகொண்டால்மாத்திரம் மொழியின் ஆரம்ப

வரலாற்றை விளங்கிக்கொள்ள முடியும். ஆரம்ப மொழி எங்கள் மொழியைவிட விளக்கக் குறைவாயிருந்தது. ஆயினும் அது அனுகூலமான பேச்சுக்கு உதவியாயிருந்தது. ஒன்றை ஏற்றுக்கொள்ளும்போது அல்லது வெறுப்பைக் குறிக்கும்போது காட்டும் பார்வையும், உடம்பாட்டை அல்லது வினைவை உணர்த்தச்செய்யும் ஒலிக் குறிகளும் வசனங்களின் குறிகள் அல்லது வசனங்களாகும். அவற்றைத் தனித்தனி வசனங்களாக மொழிபெயர்க்கலாம். இவ்வாறே ஆதிச் சொல் மூலங்கள் வசனங்களாயின.

# 9. பண்டையோர் எழுத உபயோகித்த பொருள்கள்

புராதன மக்கள் பொன், வெண்கலம், ஈயம், தகரம் முதலிய உலோகங்களை எழுதுதற்கு உபயோகித்தனர். ஈயத் தகடுகளின் உபயோகம் பெரு வழக்கில் இருந்தது. பழைய அசீரியர் வெய்யிலிற் காய்ந்த அல்லது சூளையில் வெந்த களிமண் தட்டுகளில் தமது வரலாறுகளை எழுதிவைத்தனர். இவ்வகைய பல தட்டுகள் எகிப்திற் கண்டெடுக்கப்பட்டன. மிருகத் தோல் அல்லது தாவரப் பொருள்கள் கிடைத்த ஞான்று உறுதியான உலோகப் பொருள்களின் உபயோகம் குறைவதாயிற்று. கடினமான பொருள்களுக்கும் மிருதுவான பொருள்களுக்கு மிடையிலுள்ள வேறொரு பொருளும் உபயோகத்தில் இருந்தது. அது மேற்பக்கம் மெழுகினால் மெழுகப்பட்ட மரப்பலகையாகும். மெழுகின்மேல் எழுதுவதற்குக் குச்சு உபயோகிக்கப்பட்டது. இவ்வகையான இரண்டு அல்லது மூன்று பலகைகள் வளையங்களிட்டுச் சேர்த்துக் கட்டப்பட்டிருக்கும். இவை நாளாந்தர நிகழ்ச்சிகளை எழுதவும், கணக்குப் பதியவும், திருமுகம் எழுதவும், பள்ளிச் சிறுவர் உபயோகிக்கவும், பிற எழுத்து வேலைகள் புரியவும் பயன்படுத்தப்பட்டன. இவ்வகையான பலகைகள் கி. பி. 1148 வரையும் பயன்படுத்தப்பட்டன.

என்பதற்கு ஆதாரம் காணப்படுகின்றது. இப் பலகைகள் மேற்கு ஐரோப்பாவின் எல்லாப் பகுதிகளிலும் உபயோகிக்கப்பட்டன. 13-ம், 14-ம் நூற்றாண்டுகளில் பணம் சம்பந்தமான கணக்கெழுதிய பலகைகள் கண்டு எடுக்கப்பட்டன. அயர்லாந்திலும் இத்தகைய பலகைகள் காணப்பட்டன. இதே காலத்தில் இவ்வகைப் பலகை இத்தாலியில் உபயோகிக்கப்பட்டிருக்கின்றது. 16-ம் நூற்றாண்டில் இவற்றின் உபயோகம் பெரும்பாலும் நின்று விட்டது. மெழுகின்மீது எழுதும் வழக்கம் சமீப காலம் வரை சிறிதளவில் இருந்தது. இன்றும் இத்தாலியிலுள்ள உரூவென் (Reuen) தேசத்தில் இவ்வகையான தகடுகள் மீன் கடைகளில் கணக்கெழுத உபயோகிக்கப்படுகின்றன.

சில சமயங்களில் உரோமர் மரத்துக்குப் பதில் தந்தத்தை உபயோகித்தனர். அவர்கள் இலக்கியங்களில் இவ்வகையான குறிப்புகள் காணப்படுகின்றன. தந்தத் தகடுகள் கிறிஸ்த தேவாலயங்களில் வைத்து பிரதம குருமாரின் பெயர்கள் குறிக்கப் பயன்படுத்தப்பட்டன.

பழைய எகிப்தில் 'பைப்பிரஸ்' என்னும் நாணற் புல்லின் தண்டுகள் பிளந்து ஒட்டிக் கடுதாசிகளாக உபயோகிக்கப்பட்டன. 'பைப்பிரஸ்' என்னும் நாணல் மனிதனின் கைப்பருமையில் பத்து முழம் ஓங்கி வளரும். பைப்பிரஸ் கடுதாசியின் உபயோகம் கி. மு. 2000 வருடங்களுக்குமுன் அறியப்பட்டிருந்தது. பழைய உலகின் பெரும் பகுதியில் பைப்

பிரஸ் கடுதாசிகளே எழுத உபயோகிக்கப்பட்டன. கடுதாசியை உணர்த்தும் 'பேப்பர்' என்னும் ஆங்கில மொழி பைப்பிரஸ் என்னும் சொல்லின் திரிபே.

பைப்பிரஸ் எகிப்திலிருந்து கிரேக்குக்கும் இத்தாலிக்கும் மிகுதியாக ஏற்றுமதி செய்யப்பட்டது. கி. மு. இரண்டாம் நூற்றாண்டில் கிரேக்க மொழியில் எழுதப்பட்ட பைப்பிரஸ் கடுதாசிச் சுருள்கள் காணப்படுகின்றன. பைப்பிரசுக்கு முன் தோல் உபயோகிக்கப்பட்டது. தோலின் உபயோகம் கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டுவரையும் இருந்தது. 5-ம் நூற்றாண்டு முதல் 10-ம் நூற்றாண்டு வரையில் உபயோகித்த பைப்பிரஸ் தாள்கள் காணப்படுகின்றன. பிரான்ஸ் தேசத்திலும் பைப்பிரஸ் தாள்கள் உபயோகிக்கப்பட்டன. ஒன்று சேர்த்துக் கட்டப்பட்ட பைப்பிரஸ் தாள்களில் புத்தகங்கள் எழுதப்பட்டன. புத்தகங்களின் மேலும் கீழும் தோல் வைத்துக் கட்டப்பட்டன. பிரான்சிலும் இத்தாலியிலும் இவ்வகையான புத்தகங்கள் உபயோகத்திலிருந்தன.

தோல் மிகப் பழங்காலந்தொட்டு உபயோகிக்கப்படுகின்றது. மேற்கு ஆசியாவில் தோல் உபயோகிக்கப்பட்டதைப்பற்றி பழைய நூலாசிரியர்கள் குறிப்பிட்டிருக்கின்றனர். நமக்குப் புதிதாகக் கிடைத்த பைப்பிரஸ் தாளை அயோனியர் தோல் என்னும் பெயரால் வழங்கினர். யூதர் பழைய வழக்கின்படி இன்றும் பிரமாணங்களைத் தோலில் எழுதுகின்றனர்.

உரோமர் சிவப்புச் சாயமூட்டிய தோலைப் பைப்பிரஸ் புத்தகங்களுக்கு அட்டையாக உபயோகித்தனர்.

சீனர் பஞ்சினாற் செய்யப்பட்ட கடுதாசியை மிகப் பழைய காலத்திலேயே உபயோகித்தனர். அராபியர் எட்டாம் நூற்றாண்டில் அதன் உபயோகத்தை அறிந்திருந்தனர். 13-ம் நூற்றாண்டில் கிரேக்க கையெழுத்துப் பிரதிகள் அக்கடுதாசிகளில் எழுதப்பட்டன. இத்தாலிக்கு மேற்கே கடுதாசியின் உபயோகம் அறியப்படவில்லை. கந்தைத் துணியினாற் செய்யப்படும் கடுதாசி ஐரோப்பாவில் 14-ம் நூற்றாண்டில் உபயோகிக்கப்பட்டது. இது படிப்படியாக தோலின் இடத்தை எடுத்தது. 15-ம் நூற்றாண்டில் கடுதாசியும் தோலும் கலந்த கையெழுத்துப் புத்தகங்கள் மிகுதியாக இருந்தன.

பழைய பைப்பிரஸ் புத்தகங்கள் பெரும்பாலும் சுருள்களாகக் காணப்படுகின்றன. தோல் புத்தகமாகக் கட்டப்பட்டுப் புத்தகத்தின் பெயர் முடிவில் எழுதப்பட்டது. அவ்விடத்தில் தானே புத்தகத்திலுள்ள வரிகள் குறிக்கப்பட்டன. இது ஒருபோது அதன் விலையை நிர்ணயிப்பதற்காகவாயிருக்கலாம். தோற் புத்தகங்கள் நேரான கீறுகளின்மேல் எழுதப்பட்டன. பல நிற மைகள் எழுத உபயோகிக்கப்பட்டிருக்கின்றன. பொன் வெள்ளிகளின் நிறந் தீட்டித் தோலின் முகப்பில் எழுதப்பட்டன. மஞ்சள் ஊதா சிவப்பு என்னும் நிறமைகள் பெரும்பாலும் உபயோகத்திலிருந்தன.

மெழுகில் எழுதுவதற்குக் கூரிய குச்சுகள் உபயோகிக்கப்பட்டன. பைப்பிரஸ் தாள்களில் தூலிகைகளில் மைதொட்டு எழுதப்பட்டது.

இந்தியா தேசத்தில் தளப்பத்து பனை முதலிய வற்றின் ஓலைகளில் எழுத்தாணியால் புத்தகங்கள் எழுதப்பட்டன. ஏடுகளில் சித்திரங்களும் வரையப் பட்டன. கற்களிலும் செப்புத் தகடுகளிலும் மலை களிலும் சாசனங்கள் எழுதப்பட்டன.

சிந்துநதிப் பள்ளத்தாக்குகளில் சூளை வைத்த களிமண் தகடுகளில் எழுதப்பட்ட சாசனங்கள் கண்டு எடுக்கப்பட்டன. அவற்றின் காலம் ஏழா யிரம் ஆண்டுகளாகும்.

# 10. * போசன் கதை

ஆதியிலே தாராபுரியிலே சிந்துலன் என்னும் அரசன் ஒருவன் இருந்து அரசாண்டான். அவனுக்கு முதுமைப் பருவத்திலே போசன் என்னும் புத்திரன் பிறந்தான்.

சில காலங்களின் பின்பு சிந்துல ராசன் தனக்கு மரணகாலஞ் சமீபித்தலையும், தன் மகன் போசன் சிறுவனா யிருத்தலையும் குறித்து மந்திரிமாரோடு கலந்து எண்ணினான்; இராச்சியபாரத்தைத் தாங்கும் வலிமையுடைய தம்பி யிருக்கச் சிறுவனாகிய மகனிடத்தில் அதனை யேற்றுதல் பழியும் பாவமுமாமென்று துணிந்து, இராச்சியத்தையும் ஐந்து வயசினனாகிய புத்திரனையும் முஞ்சனிடத்தே கொடுத்துவிட்டுச் சில நாளில் மரணமடைந்தான். முஞ்சன் போசனைப் பாடசாலையிற் படிக்கவிட்டுத் தான் அரசாண்டிருந்தான்.

அப்படியிருக்குங் காலத்திலே ஒரு நாள் சோதிட நூல்களின் மகா சமர்த்தராகிய பூசுரரொருவர் முஞ்ச ராசனுடைய சபையிலே வந்து, அவனைக் கண்டு, தம்முடைய வித்தியா சாமர்த்தியத்தை வியந்து பேசினார். அவன், "ஐயரே! நான் பிறந்த நாண் முதல் இன்று வரையுஞ் செய்த செயல்களை

* நீர்வேலிச் சங்—சிவப்பிரகாச பண்டிதர் சமஸ்கிருத நூலிலிருந்து மொழிபெயர்த்தது.

யும், பெற்ற பயன்களையும் முற்றச் சொல்வீராயின் நீர் சாமர்த்திய முடையவரே" என்றான். பூசுரர் அவன் இரகசியமாகச் செய்த செயல்களைத் தானுந் தவறவிடாது முற்றச் சொல்லி முடித்தார். உடனே அவன் அதிசயமு மானந்தமுமடைந்து அவரை வணங்கி உயர்ந்த சிங்காசனத்திலிருத்தி அவருக்குப் பலவகை யுபகாரங்களைக் கொடுத்தான்.

அப்போது அச்சபையிலிருந்த புத்திசாகரன் என்னும் மந்திரியினுடைய வேண்டுகோளின்படி, முஞ்சகன், அவ்வையரைப் போசனுடைய சாதக பலனைச் சொல்லும்படி கேட்டான். ஐயர், "நான் அப்போசனை ஒருதரம் பார்த்தபின் சொல்வேன்" என்றார். அப்பொழுதே முஞ்சன் அவனைப் பாட சாலையினின்று அழைப்பித்துக் காட்டலும், ஐயர் பார்த்துக்கொண்டபின் முஞ்சனை நோக்கி, "இராசாவே! போசனுடைய அதிட்ட விசேடத்தை விரித்துச் சொல்லுதல் பிரமதேவராலும் இயலாது! ஏழைப் பிராமணனாகிய நானெப்படிச் சொல்வேன்! போசன் ஐம்பத்தைந்து வருடம் ஏழு மாதம் மூன்று நாள் வரையும் கௌட தேசத்தோடு தென்னாடு முழுவதையும் ஒரு குடைக்கீழ் ஆளுவன்" என்றார்.

அதுகேட்ட முஞ்ச ராசன் அகத்தே மிகுந்த கவலையுடையவனாயும், புறத்தே அதனைக் காட்டாமல் ஐயரை உபசரித்து அனுப்பிவிட்டான். அவன் அன்றிரவு சிறிது முறக்கமுமில்லாமற் சயனசாலையிலே தனியே நெடுநேரம் ஆலோசித்து, "போசன்

இராச்சியத்தை யடைவானாயின் நான் உயிரோ டிருப்பினும் இறந்தவனேயாவேன். ஆதலால் எவ்வாறாயினும் மிக விரைந்து போசனைக் கொல்லு விப்பதே தகுதி" என்று தன்னுள்ளே நிச்சயித்துக் கொண்டான்.

மற்றை நாள் முஞ்ச ராசன் தன் கீழதிகாரி யாகிய வற்சராசனை அழைப்பித்துத் தனியிடத் திலே அவனுக்குத் தன் கருத்தை யறிவித்து, "இன்றைக்கு நீயே போசனைப் புவனேசுவரி வனத்திலே இரவின் முதற் சாமத்திலே கொன்று அவனுடைய தலையை இங்கே கொணர்ந்து காட்டக் கடவாய்" என்று கற்பித்தான்.

அப்பொழுது வற்சராசன் அவனை வணங்கி, "சுவாமீ! தங்கள் கட்டளை அடியேனாற் சிரமேற் கொள்ளப்படுவதே; ஆயினும் அடியேன் செய்யும் விண்ணப்பத்தைக் கோபியாமற் கேட்டருளல் வேண்டும். முன்னொளிலே அயோத்தியில் தசரத புத்திரராகிய இராமசுவாமிக்கு முடிசூட்டுவதென்று முகூர்த்தம் நியமித்தவர் வசிட்ட மகாமுனிவர்; அவரோ பிரமதேவருடைய புத்திரர்; தவத்திற் சிறந்தவர்; விசேட ஞானமுடையவர். இங்ஙனமாக வும், அந்த முகூர்த்தத்திலே இராமசுவாமி இராச்சி யத்தை விட்டுக் காட்டுக்குப் போதலாயிற்று. அங்கேயும் மனைவியை இழத்தலாயிற்று. ஆனபின் வசிட்டருடைய வாக்கும் வீணாயிற்றே! இங்ஙன மாக, நாங்கள் வயிறு வளர்க்கவந்த பிராமண னுடைய வார்த்தையை நம்பிக்கொண்டு அருமந்த

இராசகுமாரனைக் கொல்ல நினைப்பதோ? கேட்க,

‘இச்சொல்லா லிதுவந் தென்றூரா யாமலே
எச்சொலு மேலோ ரியற்றுர்தார்—இச்சையொடு
வல்லை யியற்றுவரேல் வந்திடுமே மாருத
அல்லலவர்க் கென்றே யறி’

என்றார் மேலோர்.

அன்றியும் இவனைக் ‘கொல்லின், முன்னே சிந்துலராசன் மேலே மிகுந்த பிரீதியுடையவர்களாயிருந்து இப்பொழுது தங்களையும் அனுசரிக்கின்ற மகா வீரர்கள் பலரும் உடனே தங்களுக்குப் பகை யாவர். இப்படியெல்லா மாகையாற் போசனைக் கொல்லுதல் புத்தியாகாது” என்று சொன்னான்.

அப்பொழுது முஞ்ச ராசன் கோபமடைந்து, “நீயே இராச்சியத்துக்குத் தலைவன்! சேவகன் ஆகின்றிலை! கேள்!

‘சேவகனே யன்றலைவன் செப்புமொழி கேட்கிலனேல்
பாவியவன் றன்னைப் படுபாவனல்—மேவுமவன்
ஆட்டுக் கழுத்தி லதன்போலுஞ் சீவனத்தாற்
காட்டுபயன் யாதுமில்லை காண்’

என்பது மேலோர் வாக்கு” என்றான். உடனே வற்சன், ‘சமயத்துக்கேற்றது சூழ்ந்து செயற்பாலது’ என்று எண்ணிக்கொண்டு, “சுவாமீ! தங்கள் சொற்படி செய்கிறேன்” என்று சொல்லிக் கொண்டு அவ்விடத்தை விட்டுப் போனான்.

பின்பு வற்சன் உபாத்தியாயரை யழைப்பித்து, பாடசாலையினின்று போசனைக் கொண்டு

வரும்படி கற்பித்து விடுத்தான். அப்படியே அவரால் வருவிக்கப்பட்ட போசன் கோபமடைந்து வற்சனை நோக்கி, "பாவீ! இராச குமாரனாகிய என்னை வெளியே யழைப்பித்தற்கு நீ யார்?" என்று வைது, தன்னுடைய இடக்காலிற் பாதுகையைக் கையிற் கொண்டு அதனாலவனைக் கதுப்பிலடித்தான். அவன், "அடியேன் இராசருடைய கட்டளைப்படியே செய்தேன்" என்று போசனைத் தேரிலேற்றிக்கொண்டு புவனேச்சுவரி வனத்துக்குப் போனான்.

அப்போது, "போசன் கொல்லப்படுகிறான்" என்று பட்டணத்துக் கதை பரவ எல்லாருந் துயரடைந்தார்கள். சிலர் வாள், வேல் முதலியவற்றினாலே தம்மைத்தாமே கொன்றார்கள். போசனுடைய தாயாகிய சாவித்திரி யென்பாள் நிகழ்ந்ததை யறிந்து விழுந்து அழுது புலம்பினாள்.

வற்சன் அத்தமயன காலத்தின்பின் புவனேச்சுவரி கோயிலை யடைந்து, ஐயர் சோதிடஞ் சொன்னமையையும், அதுகேட்ட முஞ்சன் கொன்று தலை காட்டுமாறு தனக்கு வலிந்து கட்டளை தந்தமையையும் போசனுக்குச் சொன்னான்.

போசன், "வற்சனே! இராமசுவாமிக்கும் பாண்டவர்களுக்கும் வனவாசமும், நளனுக்கு இராச்சிய இழப்பும், இராவணனுக்குச் சிறையும் மரணமும், சந்திரனுக்குத் தேய்வும் விதி வசத்தால் அமைந்தன வல்லவா! அப்படியே விதி வசத்தால் அமைவனவற்றை விலக்க வல்லவர்கள் யார்?"

என்று சொல்லிவிட்டு, இரண்டு ஆலயிலைகளை யெடுத்து ஓரிலையைப் பாத்திரமாகத் தைத்து, தன் கணைக்காலை வாளினுற் சிறிது வெட்டி ஒழுகுகிற இரத்தத்தை அவ்விலைப் பாத்திரத்தில் ஏற்று வைத்துக்கொண்டு, ஒரு தும்பினுலே அவ்விரத்தத் தைத் தொட்டுத் தொட்டு மற்றை யிலையிலே ஒரு சுலோகம் எழுதி, அதை அவன் கையிற் கொடுத்து, "வற்சனே! நீ அரசர் கட்டளைப்படி செய்தபின் இவ்விலையை அவர் கையிற் கொடுத்துவிடு" என்று சொன்னன்.

அப்போது வற்சனுடைய தம்பியானவன் அவனை நோக்கி, "அண்ணு கேட்க, 'ஒருவன் சரீரத்தை விட்டு நீங்கும்போது அவனுடைய திரவியங்களேனும், மாதா, பிதா, பத்தினி, புத்திர, மித்திரர்களேனும் அவனைப் பின்றொடர்தலில்லை; தருமம் ஒன்றே பின்றொடர்வது. ஆதலால் அத்தருமந்தானே உயிர்த்துணை; தருமத்தை விரும்பாதவன் கல்வி, செல்வம், வலிமை முதலியவற்ருன் மிகப் பெரியவனுயினும் ஒன்று மில்லாதவனே யாவன்' என்பன ஆன்ரோர் மொழிகளன்ரே! இங்ஙனமாக, நீர் ஒரு சிறிதேனுந் தரும சிந்தையில்லாமல் இப்பாலனைக் கொல்ல உடன்பட்டீரா! ஐயையோ! உம்முடைய மனந்தான் இவ்வளவு கடினமா?" என்ருன்.

அது கேட்ட வற்சன் தன்னுள்ளே சூழ்ந்து கொண்டு போசனை வணங்கித் தேரிலேற்றி, இருள் செறிந்த அவ்விரவிற்ருனே மீண்டு பட்டினத்திற்

சேர்ந்து, வீட்டிலே நிலவறையினுள்ளே போசனை மறைத்துவிட்டு, கைவல்லவர்களாகிய சிற்பர்களைக் கொண்டு போசனுடைய தலையே யென்று முழுதும் நம்பத்தக்க ஒரு போலித் தலை செய்வித்து, அதை யெடுத்துக்கொண்டு அரசன் வீட்டிற் சென்று, அவனைக் கண்டு வணங்கி, "சுவாமீ! கட்டளையிட்ட படி செய்துவந்தேன்" என்றான்.

முஞ்சன், "வற்சனே, நீ வாளால் வெட்டிய பொழுது புத்திரன் யாது கூறினன்?" என்றான்.

வற்சன், "அவன் ஒரு பத்திரம் எழுதித் தந்தான்; அது இது; ஏற்றுப் பார்க்க, சுவாமீ! இங்கே தலையையும் பார்த்துக்கொள்க" என்றான்.

முஞ்சன் தலையைப் பார்த்துச் சிறிதே யழுது, "வற்சனே! இந்தத் தலையைக் கொண்டுபோய் அப்பாற்படுத்து" என்று சொல்லி அவனை யனுப்பி விட்டு மனைவியைக் கொண்டு விளக்கெடுப்பித்து அப்பத்திரத்தி லெழுதிய சுலோகத்தை வாசித்துப் பார்த்தான்.

அச் சுலோகத்தின் கருத்து இது :—

"கிருத யுகத்திலே பெரிது விளங்கிய மாந்தாதா என்னும் மகாராசன் இறந்தான்! பெரிய சமுத்திரத்தின்கண்ணே ஒரு சேதுவைக் கட்டி இராவணனைக் கொன்ற இராம சுவாமி என்னும் ஆதி மன்னனிறந்தான். அம்மட்டோ! பொறையினிற் சிறந்த தருமன் முதலாய அநேக கோடி முடிமன்னர் இறந்தார்கள்! அம்மகான்கள் ஒருவரோடாயினும்

இப்பூமி உடன் சென்றிலது. இராசாவே! உன்னோடோ இப்பூமி உடன் செல்வது நிச்சயந்தானே!" என்பதாம்.

முஞ்ச ராசன் அச்சுலோகத்தின் கருத்தை யறிதலும் தன் வயமிழந்து கீழே விழுந்தான். மனைவி புடைவையினாலே வீசியபின் அறிவடைந்தான். "பெண்ணே, புத்திரக் கொலைசெய்த சண்டாளன் நான்! என்னைத் தீண்டாதே! ஐயையோ! நான் பாவி" என்று புலம்பினான்.

அவ்வாறு புலம்பிய முஞ்சன் உடனே தன் வாயிற்காவலாளரைக் கொண்டு அறிவிற் சிறந்த அந்தணர்களை அவ்விடத்தில் அழைப்பித்து, அவர்களை வணங்கி, "சுவாமிகாள்! புத்திரக் கொலையென்னும் பாவம் என்னாற் செய்யப்பட்டது; இனியிதற்கு யாது பரிகாரஞ் செய்யத்தக்கது? கற்பித்தருள்க" என்று கேட்டான். அவர்கள், "இராசனே! அதி சீக்கிரமாக அக்கினியிற் பிரவேசித்தலே அதற்குப் பரிகாரமாம்" என்று சொன்னார்கள்.

அப்போது புத்திசாகரனென்னும் மந்திரி அவ்விடத்திற் சென்று அரசனை வணங்கி, "சுவாமீ! முன்னே சிந்து ராசர் தாம் ஆண்ட விராச்சியத்தை உமக்குத் தந்த வப்பொழுதே போசனையும் உம்முடைய ஒக்கலையில் ஒப்பித்துவிட்டா னன்றோ! இங்ஙனமாக நீர் யாது செய்கிறீர்! கேளும்" என்று சொல்லி, 'நிலையுறுவதுபோலத் தோன்றிச் சில பொழுதில் அழிவதாகிய இளமை

யின் மயலடைந்த கயவர்கள் செய்வன தெரியாது உய்தியில் குற்றம் புரிந்து ஒய்யெனக் கெடுவர்," என்பது முதலிய நீதி மொழிகளைச் சொன்ஞன். அரசன், "நான் இந்த இரவிற்ருனே அக்கினிப்பிரவேசஞ் செய்தலை நிச்சயித்தேன்" என்ருன். புத்திசாகரன் அது கேட்டுப் பரிதாபத்தோடு வெளியில் வந்து இருந்தான். உடனே அரசன் புத்திரக் கொலைப்பாவத்தைப் பரிகரிக்கும் பொருட்டு அக்கினிப்பிரவேசஞ் செய்கின்ருன் என்று கதை பரவப் பலருங் கூடினுர்கள். வற்சன் அவ்விடத்திலே புத்திசாகரனைத் தனியே கண்டு, போசன் காக்கப்பட்டிருத்தலை இரகசியமாக அறிவித்தலும், அவன் ஒருபாயஞ் சொல்லி உடனே வற்சனை வெளியில் அனுப்பினுன்.

சிறிது பொழுதின்பின் சடைமுடி யுடையராய், படிக குண்டலமணிந்த இரு செவியினராய், உடம்பு முழுவதும் திருநீறு பூசினவராய், பட்டுக் கௌபீனந் தரித்தவராய், அழகிற் சிறந்தவராகிய ஒரு சன்னியாசியார் கையிலே யானைத் தந்தமாகிய தண்டு பிடித்துக்கொண்டு அங்கே வந்தார். புத்திசாகரன் அவரை நோக்கி, "ஓகோ! சன்னியாசியாரே! எங்கிருந்து வருகிறீர்? உம்முடைய வாசத்தானம் யாது? நீர் யாதாயினு மொரு சிறந்த கலாசாமர்த்தியமேனும் வைத்திய சாமர்த்தியமேனும் உடையீரா?" என்று கேட்டான். சன்னியாசியார் அவனை நோக்கி,

"எந்தெந்தத் தேசந்தானு மிருக்கையே, வீடுதோறுந்
தந்திடு பிச்சைதானே தனியுணவாகும், வாவி
*உந்தியிற் சலமுமுண்டே, யொப்பின்மெய்ப் பொருளுணர்ந்த
சிந்தைகொண் ஞானிகட்குச் செல்வத்தாற் பயனென்னாமா"

என ஒரு பாட்டுப் படித்து, "தம்பீ! கேளும்! நமக்கு ஓரிடம் இல்லை; எங்கும் திரிவாம்; குருவின் உபதேசத்தின்படியே நிற்பாம்; எல்லா வுலகையுங் கரதலாமலகம்போலக் காண்பாம்; பாம்பு கடியுண்டவரை, நோய் குடிகொண்டவரை, படைக்கலங்களால் அறுபட்டவரை, நஞ்சினுற் கெட்டவரைக் கணப்பொழுதில் உய்யச்செய்வாம்" என்று சொன்னார். இந்த வசனங்கள் உள்ளே யிருந்த முஞ்சன் காதிலேறுதலும், அவன் உடனே வெளியில் வந்து, சன்னியாசியாரை வணங்கி, "சுவாமீ! யோகீச்சுவரரே! பெரும் பாவியாகிய என்னுற் கொல்லப்பட்ட புத்திரனை உயிர்ப்பித்து என்னைக் காத்தருள்க" என்ருன். அவர், "அரசனே, அஞ்சாதே. கடவுளினுடைய கிருபையினுலே உன் புத்திரன் உயிர் தப்புவான். புத்திசாகரனேடு ஓமத்திரவியங்களைச் சுடலைக்கு அனுப்பு" என்ருர். அரசனும் அப்படியே செய்தான். அப்பொழுதே போசனும் இரகசியமாகச் சுடலைக்குக் கொண்டு போகப்பட்டான். உடனே "சன்னியாசியார் போசனை உயிர்ப்பித்தார்" என்று பிரசித்தி யுண்டாயிற்று. பின்பு போசனை யானையிலேற்றி வாத்திய கோஷத்தோடு அழைத்துக்கொண்டு வருத

* உந்தி - ஆறு.

லும் முஞ்சன் அவனைத் தழுவி யழ, அவன் அழு கையை மாற்றி இவனைத் துதித்தான்.

பின்பு ஆனந்தபரவசனாகிய முஞ்சன் அவனைச் சிங்காசனத்தி லிருத்தி, இராச்சியத்தைக் கொடுத்தான். தன் புத்திரர்களுக்கு ஒவ்வொரு கிராமங் கொடுத்து அங்கங்கே யிருத்திவிட்டு, மூத்த புத்திரனாகிய சயந்தனைப் போசன் சமீபத்திற்றானே இருத்தினன்; சில நாட்களின் பின்பு தன் மனைவி மாரோடு காட்டை யடைந்து வீடுபேற்றை வேண்டித் தவஞ் செய்தான்.

# 11. * குண்டலகேசி வரலாற்றுச் சருக்கம்

இராசகிருகம் என்னும் நகரத்தை அரசாண்ட அரசனது மந்திரிக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது. அக்குழந்தைக்குப் பத்திரை எனப் பெயரிட்டுப் பெற்றோர் சீராட்டிப் பாராட்டி வளர்த்தார்கள். இவ்வாறு வளர்ந்த அப்பெண்மகவு பெரியதாகி மணம் செய்யத்தக்க வயதினை யடைந்தது. ஒரு நாள், இப்பெண் தன் மாளிகையின் மேற்புறத்தில் உலாவியபோது தெருவழியே கட்டழகு மிக்க காளை ஒருவனை அரசனது சேவகர் கொலைக்களத்துக்கு அழைத்துக்கொண்டு போவதைக் கண்டாள். கண்டதும் அக்காளையின்மேற் காதல் கொண்டாள். அவன் அரசனது புரோகிதன் மகன். வழிப்பறி செய்த குற்றத்திற்காகக் கொலைத்தண்டனை அடையப்பெற்றுக் கொலைக்களத்திற்கு அழைத்தேகப் பட்டான். இக் குற்றவாளியின்மேல் காதல் கொண்ட பத்திரை அவனையே மணம்புரிவேன்; அன்றேல் உயிர்விடுவேன் என்று பிடிவாதஞ் செய்தாள். இதனை யறிந்த இவள் தந்தை கொலையாளருக்குக் கைக்கூலி கொடுத்து அவனை மீட்டுக்

---

* மயிலை-சீனி வெங்கடசாமி அவர்களின் "பௌத்தமும் தமிழும்" என்னும் நூலிலிருந்து எடுத்தது. (மொழிபெயர்ப்பு).

கொண்டுவந்து நீராட்டி ஆடையணிகளை அணிவித்துப் பத்திரையை அவனுக்கு மணஞ்செய்வித்தான்.

மணமக்கள் இருவரும் இன்பமாக வாழும் காலத்தில் ஒரு நாள், ஊடல் நிகழ்ச்சியின்போது பத்திரை தன் கணவனைப் பார்த்து, 'முன்பு கள்வன் அல்லனோ?' எனக் கூறினாள். அவன், அவள் தன்னை இகழ்ந்தாளெனக் கருதி மிக்க சினங்கொண்டான். ஆயினும், அதனை அப்போது வெளியிற் காட்டாமல் அடக்கிக்கொண்டான்.

பின்னர், ஒரு நாள் அவன் பத்திரையை அழைத்து, அவளிடம், தன் உயிரைக் காப்பாற்றிய தெய்வத்தை வழிபடும்பொருட்டு அருகிலிருக்கும் மலையுச்சிக்குப் போக விரும்புவதாகவும், அவளையும் உடன் வரும்படியாகவும் கூறினான். அவளும் இசைய, இருவரும் மலை யுச்சிக்குச் சென்றனர். மலை யுச்சியினை அடைந்தவுடன், அக்கொடியோன் அவளைச் சினந்து நோக்கி, "அன்று நீ என்னைக் கள்வனென்று கூறினையன்றோ? இன்று உன்னைக் கொல்லப்போகின்றேன். நீ இறக்குமுன் உனது வழிபடு கடவுளை வணங்கிக்கொள்" என்றான். இதனைக் கேட்டுத் திடுக்கிட்ட அவள், 'தற்கொல்லியை முற்கொல்லவேண்டும்' என்னும் முதுமொழியைச் சிந்தித்து, அவன் கட்டளைக்குக் கீழ்ப்படிபவள் போல நடித்து, "என் கணவனாகிய உன்னையன்றி எனக்கு வேறு தெய்வம் ஏது? ஆகலின், உன்னையே நான் வலம் வந்து வணங்குவேன்" என்று சொல்லி, அவனை வலம் வருவதுபோற் பின்புறஞ்

சென்று, ஊக்கித் தள்ளினள். இவ்வாறு அக் கொடியவன் மலையுச்சியினின்றும் வீழ்ந்திறந்தான்.

இதன்பிறகு பத்திரை உலகத்தை வெறுத்தவளாய், சைன மதத்தின் பிரிவாகிய நிகண்ட மதத்தில் சேர்ந்து துறவு பூண்டாள். அந்த மதக் கொள்கைப்படி, பத்திரையின் தலைமயிரைக் களைந்துவிட்டார்கள். ஆயினும், மீண்டும் தலைமயிர் வளர்ந்து சுருண்டு காணப்பட்டது. ஆகவே சுருண்ட மயிருடையவள் என்னும் பொருள்படும் 'குண்டலகேசி' என்று அவளைக் கூறினர். இப்பெயரே பிற்காலத்தில் இவளுக்குப் பெரும்பாலும் வழங்கப்பட்டது. சிலவேளைகளில் இவளது இயற் பெயரையும் காரணப்பெயரையும் ஒருங்கு சேர்த்துப் 'பத்திரா குண்டலகேசி' என்றும் சொல்லப்படுவதுண்டு.

சைன மதத்திற் சேர்ந்த குண்டலகேசி சைனர்களிடம் சமய சாத்திரங்களையும் தர்க்க நூல்களையும் கற்றுத் தேர்ந்து, சமயவாதஞ் செய்யப் புறப்பட்டு, சென்றவிடமெங்கும் நாவல் நட்டு, வாதப் போர் செய்து வெற்றிகொண்டு வாழ்ந்தாள். (வாதப்போர் செய்வோர் நாவல் மரக்கிளையை ஊர் நடுவில் நட்டு வாதுக்கழைப்பது அக்கால வழக்கம்.) இவ்வாறு நிகழுங்கால், ஒரு நாள் ஓர் ஊரையடைந்து, அவ்வூர் நடுவில் மணலைக் குவித்து, நாவற் கிளை நட்டு, உணவு பெறுவதற்காக வீடுதோறுஞ் சென்றாள். அவ்வமயம் புத்தர் தமது சீடர்களுடன் அவ்வூர்க்கருகிலிருந்த ஒரு தோட்டத்தில் வந்திறங்கினர். அவரது சீடர்களிற் சாரிபுத்தர் என்பவர்

உணவுக்காக அவ்வூர்க்குட் சென்றார். சென்றவர் அங்கு நாவல் நட்டிருப்பதைக் கண்ணுற்று, அதன் காரணத்தை அங்கிருந்தவர்களால் அறிந்து, அங்கிருந்த சிறுவர்களை அழைத்து, அக்கிளையினைப் பிடுங்கி எறியும்படி கூறினார். அவர்களும் அவ்வாறே செய்தனர்.

பின்னர், உணவுகொள்ளச் சென்ற குண்டலகேசி மீண்டும் திரும்பி வந்தபோது, தான் நட்ட நாவல் வீழ்த்தப்பட்டிருப்பதைக் கண்டு, அதனை வீழ்த்தியவர் அருகிலிருந்த சாரிபுத்தர் என்பதனையறிந்து, அவ்வூர்ப் பெரியோரை அழைத்து அவை கூட்டச்செய்து, சாரிபுத்தருடன் வாதம் செய்யத் தொடங்கினாள். நெடுநேரம் நடைபெற்ற வாதத்தில் குண்டலகேசி வினவிய வினக்களுக்கெல்லாம் சாரிபுத்தர் விடையளித்தார். பின்னர், சாரிபுத்தர் வினவிய வினவுக்குக் குண்டலகேசி விடையிறுக்கத் தெரியாமல் தான் தோற்றாளெனச் சொல்லி, அவர் காலில் விழுந்து வணங்கி, அவரை அடைக்கலம் புகுந்தாள். சாரிபுத்தர் குண்டலகேசியைப் பார்த்து, "என்னிடம் அடைக்கலம் புகாதே, என்னுடைய குரு புத்த பகவானிடம் அடைக்கலம் புகுவாயாக" என்று சொல்லி அவளை அழைத்துச் சென்று புத்தரை வணங்கச்செய்தார். புத்தர் அவளுக்கு உபதேசஞ் செய்து அவளைப் புத்த மதத்தில் சேர்த்தார். இதுவே குண்டலகேசி என்னும் தெரிவையின் வரலாறு.

இந்தக் குண்டலகேசி என்பவள் சமயவாதம்

செய்யப் புறப்பட்டு சைனம், வைதீகம் முதலான சமயங்களைத் தருக்க முறையாகக் கண்டிப்பதாக யெற்றப்பட்டதுதான் குண்டலகேசி காப்பியமென்பது. இது தமிழிலுள்ள * ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்றாகும்.

* சிலப்பதிகாரம், சிந்தாமணி, மணிமேகலை, வளையாபதி, குண்டலகேசி என்பன ஐம்பெருங் காப்பியங்களாகும்.

# 12. நீலகேசி வரலாற்றுச் சுருக்கம்

பாஞ்சால தேசத்திலே சமுத்திரசாரன் என்னும் வேந்தன் பண்டாரவார்தனை என்னும் நகரிலிருந்து செங்கோலோச்சினன். நகர்ப்புறத்தே பழையாலயம் என்னும் சுடலை யிருந்தது. அங்கு ஒரு காளி கோயில் உண்டு. அதன் அண்மையில் சந்திரமுனி என்னும் சைன முனிவர் ஒருவர் வாழ்ந்திருந்தார்.

ஒரு நாள் நகர மாந்தர் காளிக்குப் பலியிடும் பொருட்டு விலங்குகள் பலவற்றைக் கொண்டு சுட லையிலுள்ள காளி கோயிலுக்குச் சென்றனர். பிற உயிர்களுக்கு துன்பமிழையாமையை மேற்கொண்ட சைன முனிவர் நகர மாந்தரை நோக்கி அவர்கள் பெருந் திரளான விலங்குகளைப் பலியிடக் கொண்டு வந்திருப்பதன் காரணத்தை வினவினர்.

"இத்தேவியின் அருளால் அரசி பட்டத்துக் குரிய குமாரனை ஈன்றாள். ஆதலின் இவ்விலங்கு களை எல்லாம் பலியிடும்பொருட்டு தேவியின் திரு முன்பு கொண்டு வந்திருக்கின்றோம்" என விடை பகர்ந்தனர்.

இதனைச் செவிக்கொண்ட முனிவர் அம்மாந் தரை நோக்கி, "உயிர்கள் தாம் முற்பிறப்பில் புரிந்த வினைகளின் காரணமாகப் பிறவிகள் எடுக் கின்றன. இந்நிகழ்ச்சியில் தெய்வங்களால் ஆம் வல்லமை எதுவும் இல்லை. இராச குமாரன் பிறந்த

தின்பொருட்டு நீவிர் கொடுக்கும் மிருக பலியை ஏற்று இத்தெய்வம் மகிழுமாயின், அது, மிருக வடிவாக மண்ணினாற் செய்த பிரதிமைகளையும் பலியேற்று மகிழுமன்றோ? இம்முறை இரத்தம் சிந்தும் கொடிய கொலையின்றிச் செய்யப்படும் அன்பு நிறைந்த வழிபாடாகும்" எனப் போதித்தார்.

சந்திர முனிவர் உயர்வுடையதும் பரிசுத்தமானதுமான வழிபாட்டு ஒழுங்கைக் கூறக்கேட்ட மக்கள், தாம் பலியிடும்பொருட்டுக் கொண்டுவந்த விலங்குகளை விட்டு வீடு திரும்பினார்.

முனிவரின் தரும உபதேசத்தைக் கேட்டு உயிர்ப்பலி கொடாது மாந்தர் அகன்றமையின் காளி வெகுளியுற்று சைன முனிவரைத் தண்டிக்க நினைவுகொண்டாள். தவம் நிறைந்த சைன முனிவரைத் தண்டிக்கும் ஆற்றல் காளிக்கு இல்லாமல் இருந்தது. ஆகவே, அவள் சிறு தெய்வங்களுக்குத் தலைமை வகித்த நீலகேசி என்னும் தெய்வத்தின் துணையை நாடினாள்.

நீலகேசி காளியின் வேண்டுகோளுக்கிணங்கிச் சந்திர முனிவர் வாசஞ்செய்யும் சுடலையை அடைந்து பயங்கர வடிவங்கொண்டாள். யோகத்தில் அமர்ந்திருந்த முனிவர் இதனால் அச்சங் கொண்டாரல்லர். முனிவரைப் பணியவைக்குமாறு எடுத்துக்கொண்ட இம் முயற்சி பயனற்றுப் போகவே அவள் சாந்தமான இன்னொரு முறையினால் முனிவரைப் பணியவைக்க நினைத்தாள்.

அவள் காமலேகை என்னும் இராச குமாரி

போல் வடிவங்கொண்டு தன்னை அழகிய ஆபரணங்களால் அலங்கரித்துக்கொண்டு முனிவரின் அரிய தவத்தைக் கெடுக்குமாறு அவர் முன் நின்றாள். முனிவர் தனது யோக ஆற்றலினால் அவள் யார் என்பதை அறிந்தார். அவர் நீலகேசியை நோக்கி, "நீ இராச குமாரியல்லை. நீ நீலகேசி என்னும் அணங்கு" என்றார்.

நீலகேசி தன் முயற்சி பயனளிக்கவில்லை எனக் கண்டாள்; முனிவர் தன்னை யார் என அறிந்து கூறும் வல்லமையை அளித்த யோகத்தின் பெருமையாற் கவரப்பட்டாள்.

அவள் பொறுதி கேட்கும் குரலில் "யான் உமது யோக ஆற்றலினால் தோற்கடிக்கப்பட்டேன்" எனக் கூறித் தனக்குத் தரும உபதேசம் செய்யும் படி முனிவரை வேண்டினள்.

முனிவர் நீலகேசிக்குத் தரும உபதேசஞ் செய்தார். நீலகேசி மற்றத் தேவர்களிலும் கீழான நிலைமையில் இருப்பதையும், மற்றவர் வெறுத்துத் தள்ளும் செயல்களுக்குத் தலைமை வகிப்பதையும் அவர் எடுத்துக் கூறினார்.

இந் நீலகேசி பல சமயத்தவர்களோடு வாதப் போர் செய்து வென்று சைன மதத்தை நிலைநாட்டினாளாகச் செய்யப்பட்ட நூல் நீலகேசி எனப்படும். இது தமிழிலுள்ள ஐஞ்சிறு காப்பியங்களில் ஒன்று. ஐஞ்சிறு காப்பியங்களாவன: பெருங்கதை, சூளாமணி, யசோதரகாவியம், நாககுமாரகாவியம், நீலகேசி என்பனவாகும்.

# 13. தமிழர் வாணிகம்

பண்டைத் தமிழர் வாணிகத் துறையில் மிக முன்னேற்றமடைந்திருந்தனர். அசீரியர், பபிலோனியர், எகிப்தியர், கிரேக்கர், உரோமர், சீனர், அராபியர், பொனீசியர் முதலிய பழைய நாகரிக சாதியார் தமிழ் நாட்டோடு வியாபாரத் தொடர்புடையவர்களாயிருந்தனர். பிறநாடுகளுக்குப் பண்டங்களை ஏற்றிச் செல்லும் மரக்கலங்களும், பிறநாட்டுச் சரக்குகளுடன் வந்த நாவாய்களும் தென்னிந்திய துறைமுகங்களிற் குழுமி நின்றன. தமிழர் கடற் பிரயாணத்தில் நன்றாய்ப் பழகியிருந்தனர். இந்து சமுத்திரத்தில் தென்னிந்திய மரக்கலங்களே பெரும்பாலும் ஓடிக்கொண்டிருந்தன. மரக்கலங்களின் முன்புறம், யானை, சிங்கம், குதிரை முதலியவற்றின் முகம்போற் செய்யப்பட்டிருந்தது. கி. மு. எட்டாம் நூற்றாண்டின் முன் தென்னிந்தியாவுக்கும் மேற்கு ஆசியாவுக்கு மிடையில் கப்பல் வழியாக வியாபாரம் நடைபெற்ற தென்பதற்குப் பல ஆதாரங்களுண்டு. இந்தியாவில் வேதங்கள் தோன்றுவதன் முன் தமிழர் சாலடியரோடு வியாபாரம் நடத்தினர். சாலடியாவின் தலை நகராகிய ஊர் என்னும் நகரத்தின் அழிபாடுகளில், மலையாளக் கரைகளில் மாத்திரம் காணப்படும் தேக்குமரத் துண்டு கண்டெடுக்கப் பட்டது. ஊர் என்னும் நகரம் கி. மு. 4000 வரையில் அமைக்கப்பட்டது.

தமிழர் ஆறாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே வியாபாரத் துறையில் நன்கு பயின்றிருந்தார்களென்பதை இது அறிவிக்கின்றது. கி. மு. 1700-ல் எகிப்துக்குச் சென்ற யோசேப்பின் வரலாறு, அக்காலத்தில் இந்திய வியாபாரப் பொருள்கள் வணிகர் கூட்டத்தாரால் தரைமார்க்கமாக அராபியாவுக்கூடாக, எகிப்து, சீரியா, பபிலோன் முதலிய நாடுகளுக்குக் கொண்டுபோகப்பட்டன என்பதை அறிவிக்கும். கி. மு. பதினேழாம் நூற்றாண்டில் இந்தியாவுக்கும் மேற்கே உள்ள நாடுகளுக்கும் வியாபாரத் தொடர்பு இருந்ததென்பதற்கு எகிப்திய சித்திர எழுத்து நூல்களில் ஆதாரங் காணப்படுகின்றது. குரங்கை உணர்த்தும் கவி என்னும் சொல்லின் திரிபாகிய கொவ் (கிரேக்கு) சித்திர எழுத்தில் 'கவு' என்று காணப்படுகின்றது. கி. மு. 1462-ல் முடிவெய்திய எகிப்திய பதினெட்டாவது பரம்பரையிலுள்ள அரசரின் பிரேதங்கள் இந்திய மசிலின் துணிகளாற் சுற்றப்பட்டிருந்தன. எகிப்தியர் கப்பற் பிரயாணத்துக்குப் பொனீசியரைச் சம்பளத்துக் கமர்த்தினர். தையர் தேசத்து ஹிரம் என்னும் அரசனும், சலமனின் பிதாவாகிய தாவீது என்னும் எபிரேய அரசனும் சேர்ந்து 'ஒபிர்' தேசத்துக்கு வியாபாரக் கப்பல்களை அனுப்பினர். ஒபிர்ப் பிரயாணம் மூன்று வருடத்துக் கொருமுறை நடைபெற்றது. சரக்குகளை ஏற்றுமதி இறக்குமதி செய்வதிலும், கப்பல் இடையேயுள்ள வியர்பாரத் துறைகளிற்றங்குவதிலும் மூன்று வருடங்கள் பிடித்தன

என்று சில சரித்திராசிரியர்கள் கூறுகின்றனர். ஒபிர் என்பது தென்னிந்தியாவிலுள்ள உவரி என்னும் துறைமுகம் எனக் கருதப்படுகின்றது.

சாலமன் என்னும் யூத அரசன் (கி. மு. 1000) சந்தனக்கட்டை, குரங்கு, மயில் முதலியவற்றை ஒபிரினின்றும் பெற்றான். மயில் இந்தியாவினின்றும் கொண்டுபோகப்பட்டது. துகிம் என்னும் பெயர் எபிரேய மொழியில் எழுதப்பட்ட விவிலிய நூலிற் காணப்படுகின்றது. இது தோகை என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு. மேல் நாடுகளுக்குச் சென்ற தமிழ் நாட்டுப் பொருள்கள் தங்களுடன் தமக்குரிய தமிழ்ப் பெயர்களையுங் கொண்டு சென்றன. கிரேக்க மொழியில் அரிசி 'ஒறிசா' என்றும், இஞ்சி 'இஞ்சிவேர்' என்றும், கறுவா 'கர்பிஒன்' என்றும், திப்பிலி 'பிப்லி' என்றும் வழங்கும். இவை முறையே அரிசி, இஞ்சிவேர், திப்பிலி என்பவற்றின் திரிபாகும். தந்தத்துக்கு ஹபிம் என்னும் பெயர் எபிரேயத்திற் காணப்படுகின்றது. இது இபம் என்னும் தமிழ்ச் சொல்லின் திரிபு.

இந்தியாவினின்றும் பொன், பட்டு, முத்து, வாசனைத்திரவியங்கள் ஆதிய பண்டங்கள் கிரேக்க நாட்டுக்குக் கொண்டு போகப்பட்டன. ஹோமர் என்னும் பழைய கிரேக்க புலவர் இந்தியாவினின்றும் கிடைக்கும் பொருள்களைப்பற்றிக் கூறியிருக்கின்றனர். முற்காலத்தில் இந்தியாவினின்றும் தங்கம் பிறநாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்பட்டதென்பதற்குப் பல ஆதாரங்கள் காணப்படுகின்றன. இந்

தியாவோடு வர்த்தகஞ் செய்ததால் அசீரியா ஏராள மான தங்கத்தை ஈட்டிற்று. பபிலோனிய பழைய சாசனங்களில் ஆடைக்குச் சிந்து என்றும் பெயர் காணப்படுகின்றது. இது இந்திய ஆடை என்பதைச் சரித்திர ஆசிரியர்கள் எல்லோரும் ஒத்துக்கொள் கின்றனர். இந்த ஆடை பரசீகத்துக் கூடாகப் பபிலோனுக்குச் செல்லவில்லை. அப்படிச் சென்றி ருந்தால் 'சி' என்பது 'ஹி' என்று மாறியிருக் கும்.. வேத மந்திரங்களுக்குரிய சாதியார் கடலை யும் கடற் பிரயாணத்தையும் கேள்விப்பட்டிருந் தார்களேயன்றி அவற்றை அறிந்திருக்கவில்லை. ஆகவே திராவிட மொழியைப் பேசிய சாதியார் தான் ஆடையைப் பபிலோனுக்குக் கொண்டு சென் றனர். ஆகவே தென்னிந்தியாவுக்கும் மேற்கு ஆசி யாவுக்கு மிடையில் வியாபாரம் நடைபெற்றது என் பதை மறுக்க முடியாது.

கி. மு. எட்டாம் நூற்றாண்டுக்குப்பின் நடந்த வியாபாரத்தைப்பற்றி மிகத் தெளிவான ஆதா ரங்கள் கிடைத்திருக்கின்றன. பபிலோனில் தைகிரஸ் யூபிரூதஸ் என்னும் நதிகள் சந்திக்குமிடத் துக்குச் சமீபத்தில் தமிழர் குடியேறியிருந்தார்கள். அங்கு கிருட்டிண பல தேவ வழிபாடுகள் இருந்தன வென்று அறியப்படுகின்றது. போதாயனர் மேற்கு ஆசியாவோடு வர்த்தகஞ் செய்தவர்களைக் கண்டித் திருக்கின்றனர். இதனால் வட இந்தியர் அவ்வியா பாரத்திற் பிரதானமானவர்களல்லர் எனத் தெரி கின்றது. அர்த்த சாத்திரஞ் செய்த கௌடலியர்

வட இந்தியாவிலும் தென்னிந்தியாவே வியாபாரத்திற் சிறந்து விளங்கிற்றென்றும், தென்னிந்தியாவில் பொன், நவமணி, முத்து, சங்கு முதலிய பொருள்கள் கிடைத்தன வென்றும், வட இந்தியா கம்பளம், தோல் முதலியவற்றையே அளித்ததென்றும் கூறுகின்றார்.

மதுரை அழகான ஆடைகளுக்குப் பேர் போனது. தமிழர் கடல் கடந்து திரவியந் தேடினர்களென்று தொல்காப்பியங் கூறுகின்றது. மேற்கு ஆசியாவிலுள்ள நாடுகளோடு தென்னிந்தியா வியாபாரம் நடத்தியதாகலின் கி. மு. 20-ல் பாண்டிய அரசன், அகஸ்ரஸ் என்னும் உரோம சக்கரவர்த்திக்குத் தூதனுப்பினன். இன்னொரு அரசன், கிரேக்க போர்வீரரைத் தனக்கு மெய்காப்பாளராக அமர்த்தினன். யவன போர்வீரர் பாண்டியரின் கோட்டை வாயில்களைக் காவல் புரிந்தனர்.

கிறிஸ்துவுக்குப் பல நூற்றாண்டுகளின் முன் இந்திய வியாபாரிகள் பர்மா வழியாகவும் அதன் தென்கரை வழியாகவும் சென்று கம்போதியாவில் வியாபாரத் தொடர்பை ஏற்படுத்தினர். அங்கு சிலமாகக் கிடக்கும் கட்டடங்களில் கடற்போர், கடற்பிரயாணம் ஆதியவற்றை விளக்கும் சித்திரங்கள் காணப்படுகின்றன. கடல் தரை என்னும் இருவழிகளாலும் இந்தியாவுக்கும் சீனவுக்கும் போக்குவரத்திருந்தது.

கிறிஸ்து பிறப்பதற்கு முன்பும் தமிழர் சுமத்

திரா, யாவா முதலிய நாடுகளோடு வியாபாரம் நடத்தினர்கள். இதனை மணிமேகலை என்னும் நூல் தெளிவாகக் கூறுகின்றது. சுமத்திராவை அடுத்த பாலி என்னுந் தீவில் இன்னும் தமிழராது பழக்க வழக்கங்களும், நாகரிக சின்னங்களும் வழிபாட்டு முறைகளும் காணப்படுகின்றன.

கடல் பரவை, புணரி, ஆர்கலி முந்நீர் முதலியவும், ஓடம், கலம், மரக்கலம், தோணி, மிதவை, கப்பல், நாவாய், மரம், திமில், அம்பி முதலியவுமாகிய கடலையும் மரக்கலத்தையு முணர்த்தும் தூய தமிழ்ச் சொற்கள், தமிழர் கடலையும் கடற் பிரயாணத்தையும் நன்கு அறிந்திருந்தார்கள் என்பதற்குச் சான்றுகின்றன.

கிறித்த ஆண்டின் முற்பகுதியில் தென்னிந்தியாவுக்கும் கிரீசுக்கு மிடையில் நெருங்கிய வியாபாரத் தொடர்பிருந்தது. உரோமர் முசிறியிலும் பிறவிடங்களிலும் குடியேறியிருந்தனர். யவனர் அடிக்கடி போக்குவரத்துச் செய்யு மிடங்களுள் முசிறி பிரதான இடமாயிருந்தது. கிரேக்கர் தமது வியாபாரப் பாதுகாப்பின் பொருட்டு முசிறியில் 2000 போர்வீரரை வைத்திருந்தார்கள். மலையாளக் கரையிலுள்ள பிசன்ரியம் (Byzantium) என்னும் இடத்தில் கிரேக்கர் குடியேறியிருந்தனர். உரோம தேசத்தினின்றும் அழகிய பேழைகள், பாவை, விளக்கு, மதுவகை முதலிய பொருள்கள் தமிழ் நாட்டுக்குக் கொண்டுவரப்பட்டன. மிளகு, தந்தம், நவரத்தினம், பட்டாடை, கறுவா, சந்தனக்

கட்டை முதலியன தமிழ் நாட்டினின்றும் யவன தேசத்துக்குக் கொண்டுபோகப்பட்டன.

உரோம வியாபாரப் பெருக்கம் அதிகம் இருந்தமையால் உரோமர் தமது நாணயங்களைத் தென்னிந்தியாவில் வழங்கினர். உரோமரின் நாணய உற்பத்திச் சாலை ஒன்று தென்னிந்தியாவில் இருந்ததென்று நம்பப்படுகின்றது. தென்னிந்தியாவில் தெல்லிச்சேரிக்குச் சமீபத்திலுள்ள கோட்டாயத்திலும், மதுரை மாகாணத்திலுள்ள கலியன் புத்தூரிலும், கோயம்புத்தூர் மாகாணத்திலுள்ள பொள்ளாச்சி, கருவூர், வெள்ளலூரிலும், புதுக்கோட்டை முதலிய இடங்களிலும் ஏராளமான உரோமன் நாணயங்கள் கண்டெடுக்கப்பட்டன. இவை உரோம தென்னிந்திய வியாபாரப் பெருக்கத்தைக் காட்டுகின்றன. இந்திய சரக்குகள் அலக்சாந்திரியா வழியாக உரோமை அடைந்தன.

தென்னிந்தியாவில் முத்துக்குளிப்புப் பிரதான தொழிலாயிருந்தது. வடமொழியில் முத்தைக் குறிக்கும் 'முக்த' என்னுஞ் சொல் முத்து என்பதன் திரிபே.

தென்னிந்தியாவில் முத்துக் கிடைப்பதை உரோமர் அறிந்திருந்தனர். அவர்கள் தமிழ் நாட்டினின்றும் ஏராளமான முத்தை வாங்கிச் சென்றனர். உரோமானிய பெண்கள் முத்தில் அதிகம் மோகமுடையவர்களாயிருந்தார்கள். அவர்கள் தமது மேனியை முத்துகளால் அலங்கரித்தனர். முத்து மாலைகள் ஒன்றோடு ஒன்று முட்டி ஒலி

செய்வதைக் கேட்டு அவர்கள் உள்ளம் பூரித்தனர். காலிற் றரிக்கும் செருப்புகளின் வார்கள் தாமும் முத்துகளால் அலங்கரிக்கப்பட்டன. கயஸ் குளோடியர் என்னும் உரோம அரசனின் இராணி உலோலா 300,000 தங்க நாணயம் விலையுள்ள முத்துகளால் தன்னை யலங்கரித்திருந்தாள். கிளியோபத்திரா என்னும் எகிப்திய இராணி, கீழ் நாட்டு அரசருக்கு முன் சொந்தமா யிருந்தனவும், காதில் அணியப்படுவனவுமாகிய இரண்டு பெரிய முத்துகளை வைத்திருந்தாள். 80,000 தங்க நாணயம் விலையுள்ள ஒரு முத்தை அவள் காடியில் (வின்னிகரியில்) கரைத்துக் குடித்தாள். மற்ற முத்தைக் கரைக்கும் சமயத்தில் அந்தோனியஸ் என்பவனின் வேலையாளாற் றடுக்கப்பட்டாள். தென்னிந்தியாவினின்றும் உரோம இராச்சியத்துக்கு அனுப்பப்பட்டவற்றுள், முத்து, வைடூரியம், கோமேதம், நீலம் முதலிய இரத்தின வகைகளே பிரதானமானவை. வருடத்தில் இரண்டு இலட்சம் தங்க நாணயம் வரையில் விலையுள்ள உரோம நாட்டின் செல்வத்தை இந்தியா விழுங்கிவிடுகின்றதெனப் பிளினி (கி. பி. 62—113) என்பவர் வெறுப்பாகக் கூறியிருக்கின்றார்.

பிறநாட்டு வர்த்தகர் மிளகு, கசகசா, சந்தனம் ஆகியவற்றை மலையாளக் கரையினின்றும் வாங்கினர். நெல்லூர் தொடக்கம், தெற்குக் கூடலூர், புதுச்சேரி வரையிலும் ஒருவகைத் தகட்டுச் செம்பு நாணயங்கள் நிலத்திற் கண்டெடுக்கப்பட்டன.

இவைகளோடு உரோமன் நாணயங்களும் துளை யிட்ட சீன நாணயங்களும் கண்டெடுக்கப்பட்டன. பெரிய மழைக்கும் புயலுக்கும் பின் மீன்பிடிகாரரின் பெண்டு பிள்ளைகள் இவ்வகையான நாணயங்களைக் கடற்கரை ஓரங்களிலிருந்து பொறுக்கி எடுக்கிறார் கள். கிறிஸ்த வருட ஆரம்பத்தில் நாலைந்து நூற் றாண்டுகளாகப் பிறதேச வர்த்தகம் தமிழ் நாட்டிற் பெரிதும் நடைபெற்றதென்பதற்கு இது போதிய அத்தாட்சியாகின்றது. நாணயங்களின் ஒரு புறத் தில் இரண்டு பாய்மரமுள்ளதும் தண்டு வலித்துச் செலுத்தப்படுவதுமாகிய தோணியின் வடிவம் பொறிக்கப்பட்டிருக்கிறது.

வணிகர் கடல் கடந்து மரக்கலங்களில் நெடுந் தூரம் செல்வதைப் பற்றி மணிமேகலை என்னும் நூல் அழகாகக் கூறுகின்றது. "திரைகடலோடி யுந் திரவியந் தேடு" என்னும் பழமொழி இன்னும் தமிழ் நாட்டில் வழங்குகின்றது.

முசிறி, கொற்கை, தொண்டி, மாந்தை, புகார் முதலியன தமிழ் நாட்டின் பிரதான துறைமுகங்க ளாகும். புகார் நகரின் சிறப்பைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பட்டினப்பாலையில் விரித் துக் கூறியிருக்கின்றார். கடை வீதிகளில் கங்கை, காவேரி நாடுகளின் விளை பொருள்களும், ஈழம், கடாரம் (பர்மா) முதலிய தேசங்களின் உணவுப் பொருள்களும், கீழ் கடலிற் பிறந்த பவளமும், தென் கடலிற் குளித்த முத்தும், மேற்குத் தொடர்ச்சி மலையிற் பிறந்த சந்தனக்கட்டையும்,

இமயமலையிற் பிறந்த பொன்னும், மணியும், அரேபியாவினின்றும் கடல் மார்க்கமாக வந்த குதிரைகளும், வண்டிகளிலும், கழுதைகளிலும் கொண்டுவந்த மிளகு மூடைகளும் தேக்கிக்கிடந்தன.

மரக்கலங்கள் திசை அறிந்து செல்லும் கலங்கரை விளக்கங்கள் கடற்கரைப் பட்டினங்களில் அமைக்கப்பட்டிருந்தன. இக்கட்டிடங்கள் ஓலை முதலியவற்றால் வேயப்படாது மூடு சாந்திடப்பட்டிருந்தன.

மரக்கலங்களின் உறுப்புகளைக் குறிக்க வழங்கும் சொற்கள் தமிழ்ச் சொற்களாகக் காணப்படுகின்றன. கப்பற் பாட்டு என இக்காலம் வழங்கும் பாடல்களிலும் இச்சொற்களைக் காணலாம்.

# 14. சிந்துநதிப் பள்ளத்தாக்கில் தமிழர் நாகரிகம்

சிந்துநதிப் பள்ளத்தாக்கில் ஹரப்பா, மகன் யோதரோ, சங்குதரோ என்னும் தமிழரின் புராதன நகரங்கள் புதைபொருள் ஆராய்ச்சியாளரால் அகழ்ந்து கண்டுபிடிக்கப்பட்டன. அங்கு காணப்பட்ட மாடி வீடுகள், வீதிகள், கோயில் குளங்கள், எழுத்துப் பொறித்த முத்திரைகள் ஆகியவற்றால் தமிழரின் சரித்திர காலத்துக்கு முற்பட்ட நாகரிகம் வெளிச்சத்துக்குக் கொண்டுவரப்பட்டிருக்கின்றது. ஹரப்பா, மகன்யோதரோ முதலிய நகரங்களில் வாழ்ந்த மக்களின் நாகரிகத்தை விளக்கும் மூன்று பெரிய நூல்கள் சேர் யோன் மார்சல் என்னும் ஆசிரியரால் வெளியிடப்பட்டுள்ளன. அந்நூலிற் காணப்படும் பொருட் சுருக்கம் வருமாறு:

பழஞ் சரித்திர ஆராய்ச்சி நம்மை ஐயாயிரம் ஆண்டுகளுக்கு அப்பாற் கொண்டுபோய்விடுகின்றது. சிந்து நதியின் கிழக்கு மேற்குப் பள்ளத்தாக்குகளையும் பலுச்சிஸ்தானத்தையும் நோக்குமிடத்து இந்தியா, சுமேரியாவோடும் * ஏலத்தோடும் தொடர்பும் ஒற்றுமையும் உடையதாயிருக்கின்றது. இதற்கு ஆதாரமாயுள்ள சின்னங்கள் பஞ்சாப்பி

* இது சுமேரியாவிலுள்ள ஒரு இடம்.

ளுள்ள ஹரப்பாவிலும், மகன்யோதரோவிலும் மிகுதியாகக் காணப்படுகின்றன. ஹரப்பாவென்னும் நகர் சிந்து நதியின்கீழ் ஊற்றுவரையிலும் அகழப்பட்டது. செல்வ வளம்பொருந்திய அழகிய நகரொன்று அவ்விடத்தில் ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் இருந்ததென்று அறியப்படுகின்றது. எவ்வகையான நாகரிகம் அங்கு நிலவியதென்று அறிதற்குரிய ஆதாரங்கள் கிடைத்திருக்கின்றன.

நகர் செங்கல்லாற் கட்டப்பட்டிருக்கின்றது. சுவர்கள் நில மட்டத்துக்குமேல் செங்கல்லாற் கட்டப்பட்டிருக்கின்றன. அத்திபாரம் முரடான செங்கல்லால் இடப்பட்டிருக்கின்றது. சில சுவர்கள் கற்களால் எடுக்கப்பட்டுள்ளன. மகன்யோதரோவிலும் அதன் சூழலிலும் கற்கள் கிடைத்தலரிது. வீதிகள் ஒழுங்காக அமைக்கப்பட்டிருக்கின்றன. வீடுகள் பெரும்பாலும் கிணறுடையனவாயிருந்தன. கிணறுகளின் ஊற்றுகள் ஆற்றினின்றும் வந்தன. குளிக்கும் அறைகளோடு கூடிய வீடுகள் பல காணப்படுகின்றன. வீடுகளின் அழுக்கு நீர் வெளியே கழிவதற்குச் செங்கட்டி பதித்த வாய்க்கால்கள் இருந்தன. வாய்க்கால்கள் வீதிகளில் முடிவெய்தின. வீதியில் கழிவு நீர் செல்லும் செங்கற் பதித்த வாய்க்கால்களிருந்தன. இவ்வாய்க்கால்கள் நகருக்கு வெளியே செல்லவில்லை. வீட்டுக் கூரையின் நாற்புறத்துமுள்ள அழுக்குகள் பீலி வழியாக வந்து தொட்டியில் விழுமாறு கூரைகளுக்குப் பீலிகள் அமைக்கப்பட்டிருந்தன. வீடுகள் மாடிகள் உடை

யனவாயிருந்தன. மாடிகளுக்கு ஏறிச் செல்லும் படிக்கட்டுகள் அழகாகக் கட்டப்பெற்றிருக்கின்றன. வீடுகளின் அமைப்பைக்கொண்டு அந்நகரம் மிகச் சிறப்புற்றிருந்ததெனத் தெரிகின்றது.

மகன்யோதரோவில் வீடுகளல்லாத பெரிய கட்டிடங்களுங் காணப்படுகின்றன. அவற்றின் உபயோகம் யாதென்று தீர்மானமாகக் கூறமுடியாது. ஒருபோது அவை வழிபாட்டுக்குரிய இடங்களாயிருக்கலாம். சாந்தினால் மெழுகப்பட்ட கட்டிடமொன்று சிறப்பாக அவ்விடத்திற் காணப்படுகின்றது. அது ஒருபோது அரசாங்க சபை கூடும் இடமா யிருந்தல்கூடும். அழகிய கட்டிடங்கள் சூழ்ந்த கேணி ஒன்றும் அவ்விடத்திற் காணப்படுகின்றது. அது மக்கள் நீராடுவதற்கு அமைக்கப்பட்டதாயிருக்கலாம்.

அங்கு வாழ்ந்த மக்களின் வாழ்க்கை முறைகளையும் பழக்க வழக்கங்களையும் அறிந்துகொள்ளக்கூடிய சின்னங்கள் பல காணப்படுகின்றன. கோதுமையும், வாளியும் அங்கு பயிர் செய்யப்பட்டன. உணவின்பொருட்டு மக்கள் ஆடுமாடுகளையும் கோழிகளையும் வளர்த்தார்கள். உடையின்பொருட்டு மக்கள் [illegible] உபயோகித்தனர். பல மிருகங்களின் என்புக் கூடுகள் அங்கு காணப்படுகின்றன. அவற்றால், எருமை, ஒட்டகம், யானை பலவகை மானினங்கள் முதலியன அங்கு வாழ்ந்தனவென்று தெரிகின்றது. 'யூனிக்கோன்' என்னும் ஒரு கொம்புடைய குதிரையும் அங்கு வாழ்ந்ததெனத் தெரி

கிறது. புலி, குரங்கு, முயல் முதலிய விலங்குகளின் உருவங்கள் கல் முத்திரைகளிற் காணப்படுகின்றன. இதனால் அங்குள்ள மக்கள் இவ்விலங்குகளை அறிந்திருந்தார்களெனத் தெரிகின்றது.

மகன்யோதரோவிலுள்ள மக்கள் பொன், வெள்ளி, செம்பு, ஈயம் முதலியவற்றாற் செய்த பதக்கங்களை உபயோகித்தனர். அவர்கள் வெள்ளியின் உபயோகத்தை நன்கு அறிந்திருந்தனர். இருக்கு வேத ஆரியர் வெள்ளியை அறியார். வெள்ளியை அறிந்த காலத்தில் அவர்கள் அதனை வெண் பொன் என்னும் பெயரால் வழங்கினர். அவர்கள் சாதாரண ஆபரணங்களையும், பானை சட்டிகளையும் செம்பினாற் செய்து உபயோகித்தனர். எலும்பு, ஆனைத்தந்தம், சிப்பி, மணி ஆகியன ஆபரணங்களாக உபயோகிக்கப்பட்டன. நீல நிறக் கண்ணாடியாற் செய்த காப்புகளுங் காணப்படுகின்றன. கம்பளியினாலும் பஞ்சினாலும் ஆடை நெசவு செய்யப்பட்டது. நூல் நூற்கும் சக்கரங்கள் பல காணப்படுகின்றன.

ஈட்டி, கோடரி, கிறிஸ், வில், கவண் முதலியன அவர்கள் உபயோகித்த போர்க் கருவிகளாகும். கவணில் வைத்தெறியும் உருண்டைக் கற்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. வாள் அல்லது தற்காப்புக்குரிய கருவிகள் இருந்தன வென்று அறியப்படவில்லை. மட்பாண்டங்கள் திரிகையிற் செய்யப்பட்டன. வழுவழுப்பான நிறம் பூசிய பானை சட்டிகளும் காணப்படுகின்றன.

சிறுவர் விளையாடுதற்குரிய விளையாட்டுப் பொருள்கள் ஏராளமாகக் காணப்படுகின்றன. அக்காலத்து ஒவ்வொரு பிள்ளையும் ஒவ்வோர் விளையாட்டுப் பொருளை வைத்திருந்தது எனத் தெரிகிறது. கிலுகிலுப்பை, பாவை, ஊதுகுழல், சிறு வண்டிகள் ஆகியன அவ்விளையாட்டுப் பொருள்களிற் சில. அக்கால விளையாட்டு வண்டிகளைப்போல இக்காலம் சிந்து நாடுகளில் உபயோகிக்கும் வண்டிகள் இருக்கின்றன.

அங்கு கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் அக்கால வழக்கிலிருந்த சித்திர எழுத்துகள் பொறிக்கப்பட்ட கல் முத்திரைகள் பிரதானமானவை. அவ்வெழுத்துகள் சுமேரிய மொழிக்குரியனவா யிருக்கலாம். சுமேரிய மொழிக்கும் இம்மொழிக்கும் பொதுவான ஓர் உற்பத்தி இருக்கக்கூடும். மாடு, எருமை, ஒற்றைக் கொம்புள்ள குதிரை முதலியவற்றின் சித்திரங்கள் கல் முத்திரைகளிற் காணப்படுகின்றன. இவை அக்கால மக்களின் சித்திரம் வரையும் திறமையைக் காட்டுகின்றன. முத்திரைகளிற் காணப்படும் எழுத்துப்போன்றவை சட்டி பானைகளிலும் காணப்படுகின்றன. அவ்வெழுத்துகள் இன்னும் வாசிக்கப்படவில்லை. எழுத்துக்குப் பதில் உபயோகிக்கப்பட்ட சில குறிகளே அவ்வெழுத்துகளாகும். ஒவ்வொரு குறியும் ஒவ்வோர் சொல்லைக் குறிக்கும். சீனரின் எழுத்தெழுதும் முறை இதனோடு ஒத்திருக்கின்றது. ஒரு மரத்திற் பிரிந்த இரண்டு கிளைகளுள் ஒன்று அவ்வெழுத்துக்,

மற்றென்று சீன எழுத்துமா யிருக்கலாம். ஹரப்பா வில் உபயோகிக்கப்பட்ட எழுத்துகள் முற்றாக மறைந்துவிட்டன. இவ்வெழுத்துகளைக் குறித்துப் பலவகையாக ஊகிப்பது பயனற்றது. அம்மொழி சமஸ்கிருதமன்று எனத் தீர்மானமாகக் கூறலாம். அது திராவிட மொழியோ வென்பது சந்தேகம். முத்திரைகளிற் சித்திரங்களைப் பொறிப்பதில் மாத்திரமல்ல, சிற்பத் தொழிலிலும் அம்மக்கள் திறமை யடைந்திருந்தனர். செங்கல்லினாற் செய்த தலை யில்லாத மனிதச் சிலை ஒன்று அங்கு கண்டெடுக் கப்பட்டது. இது கிரேக்கரின் கைவேலை என்று முதலிற் கருதப்பட்டது. கிரேக்கர் வருகைக்கு ஐந்நூறு வருடங்களுக்கு முற்பட்டது இச்சிலை என்று இக்காலம் நன்றாகத் துணியப்படுகின்றது.

அக்கால மக்களின் சமயமும் ஒருவாறு அறி யப்படுகின்றது. சத்தி வழிபாடே பெரும்பாலும் மக்களுக்குரியதாயிருந்தது. பழைய நாள் வழி பாடு பெரும்பாலும் இவ்வகையினதே. மூன்று முகங்களுடைய தெய்வத்தின் சிலை ஒன்று காணப் படுகின்றது. இது சிவன் சிலையாகும். பிற்காலத்து வந்த ஆரியர் சிவனையும் தமது தெய்வங்களோடு சேர்த்துக்கொண்டனரென்பதிற் சந்தேகம் இல்லை. மிருகங்களையும் மரங்களையும் சனங்கள் வழிபட்ட னர். இறந்தவர்களைச் சுடுதலும் புதைத்தலும் அக்கால வழக்கு.

சிந்துநதிப் பள்ளத்தாக்கின் நாகரிகம் ஈலம், மெசபெட்டேமியா முதலிய நாடுகளின் நாகரிகத்

மகன்யோதரோ, ஹரப்பா என்னும் பழைய நகரங்களின் நாகரிகத்தை நன்கு ஆராய்ந்தவரும் மகன்யோதரோ எழுத்துகள் பலவற்றை வாசித்த வருமாகிய ஹெரஸ் பாதிரியார் கூற்று வருமாறு :

பிற்கால இந்தியர் மேற்குப்புறமாகச் சென்று மெசபெட்டேமியாவின் தென்கோடியிற் குடியேறிச் சுமேரியர் என்னுஞ் சாதியாராயினர்.

யோகத்தில் வீற்றிருக்கும் பாவனையுடைய மூன்று முகமுள்ள நிர்வாணமான கடவுளின் சிலை ஒன்று காணப்படுகின்றது. அதன் சிரங்களில் முடிகள் காணப்படுகின்றன. இச்சிலையைச் சூழ்ந்து பல மிருகங்களின் உருவங்கள் காணப்படுகின்றன. இக்கடவுள் பசுபதி என்னும் பெயர் பெறுவார்.

'ஆண்' என்னுங் கடவுள் மற்றைக் கடவுள ருக்குத் தலைவராகக் காணப்படுகின்றனர். 'ஆண்' என்னும் பெயருக்குரியவர் சூரியன் எனத் தெரிகின்றது. சூரியன் ஒரு மாசம் ஒரு வீட்டிற் றங்குவான். ஒவ்வொரு வீட்டிற் றங்கும்போதும் சூரியனுடைய வடிவம் வெவ்வேறாகக் கொள்ளப்பட்டது. சூரியன் தங்கும் வீடுகள் எட்டு. ஆகவே அக்காலம் எட்டு மாதங்களும் ஒருமாதத்தில் நாற்பத்தைந்து நாட்களு மிருந்தன. பழைய இந்தியர் கடவுளுக்கு எட்டு வடிவம் உண்டு எனக் கருதினர். எட்டு இராசிகளாவன : ஆடு, நண்டு, கன்னி, துலாம், கடகம், மீன், யாழ் என்பனவாம். இவ்வடிவங்களைக் கடவுளராக வைத்து மக்கள் வழிபட்டனர். இவ்வடிவங்களுள் மீன் மிகவும் பிரசித்திபெற்றிருந்தது. சாசனங்கள் பல

வற்றில் இப்பெயர் காணப்படுகின்றது. இக்காலச் சிவனுடைய வடிவம் சாசனங்களிற் றெளிவாகச் சொல்லப்படுகின்றது. சிவனுக்கு மூன்று கண்களுண்டென்றும் அக்கண்கள் தனித்தனி வழிபடப் பட்டனவென்றும் சாசனங்கள் கூறுகின்றன. கடவுள் அரசனுகக் கருதப்பட்டார். அரசன் கடவுளுக்குப் பதில் அவர் ஆணையை ஏற்று நடத்துபவனுக எண்ணப்பட்டான். கடவுளுக்கு இறுவன் என்னும் பெயர் காணப்படுகின்றது. ஒரு சாசனத்தில் "தாண்டவன் இர்நால்மரம்" என்று காணப்படுகின்றது. இதற்குத் தாண்டவஞ் செய்யுங் கடவுளென்பது பொருள்.

முத்திரைகளிலிருந்து வாசிக்கப்பட்டவற்றுட் சில சொற்கள், யாழ், வேல், நாய்வேல், காலாள், எண் ஆள், எண்மை (=சிவன்), கலக்கு, நண்டு, நண்டூர், வேலூர், உழவன், அது, ஆண்டு, குட, குடவு, தடு, ஒட்டு, குட்டை, உதவு, அடு, அன்று, மாறு, அரி முதலியன. 'கோயில் எல்லாக் கடவுள் அது' என ஓர் சாசனத்திற் காணப்படுகின்றது. 'கோயிலிலுள்ள கடவுள் எல்லோரிலும் பெரிய கடவுள்' என்பது இதன் பொருள். முத்திரைகளில் குறள் வெண்பாவினுலாய பாடல்கள் பல காணப்படுகின்றன. அக்கால எழுதும் முறை இடதுபுறத்தினின்று சென்று பின்பு வலப்புறத்தினின்றும் இடப்புறமாகச் செல்வதேயாகும்.

வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் வழங்கிய பிராமி எழுத்துகள் மகன்யோதரோ

மகன்யோதரோ, ஹறப்பா என்னும் பழைய நகரங்களின் நாகரிகத்தை நன்கு ஆராய்ந்தவரும் மகன்யோதரோ எழுத்துகள் பலவற்றை வாசித்த வருமாகிய ஹெறஸ் பாதிரியார் கூற்று வருமாறு:

பிற்கால இந்தியர் மேற்குப்புறமாகச் சென்று மெசபெட்டேமியாவின் தென்கோடியிற் குடியேறிச் சுமேரியர் என்னுஞ் சாதியாராயினர்.

யோகத்தில் வீற்றிருக்கும் பாவனையுடைய மூன்று முகமுள்ள நிர்வாணமான கடவுளின் சிலை ஒன்று காணப்படுகின்றது. அதன் சிரங்களில் முடிகள் காணப்படுகின்றன. இச்சிலையைச் சூழ்ந்து பல மிருகங்களின் உருவங்கள் காணப்படுகின்றன. இக்கடவுள் பசுபதி என்னும் பெயர் பெறுவர்.

'ஆண்' என்னுங் கடவுள் மற்றைக் கடவுளருக்குத் தலைவராகக் காணப்படுகின்றனர். 'ஆண்' என்னும் பெயருக்குரியவர் சூரியன் எனத் தெரிகின்றது. சூரியன் ஒரு மாசம் ஒரு வீட்டிற் றங்குவான். ஒவ்வொரு வீட்டிற் றங்கும்போதும் சூரியனுடைய வடிவம் வெவ்வேறாகக் கொள்ளப்பட்டது. சூரியன் தங்கும் வீடுகள் எட்டு. ஆகவே அக்காலம் எட்டு மாதங்களும் ஒருமாதத்தில் நாற்பத்தைந்து நாட்களு மிருந்தன. பழைய இந்தியர் கடவுளுக்கு எட்டு வடிவம் உண்டு எனக் கருதினர். எட்டு இராசிகளாவன: ஆடு, நண்டு, கன்னி, துலாம், கடகம், மீன், யாழ் என்பனவாம். இவ்வடிவங்களைக் கடவுளராக வைத்து மக்கள் வழிபட்டனர். இவ்வடிவங்களுள் மீன் மிகவும் பிரசித்திபெற்றிருந்தது. சாசனங்கள் பல

வற்றில் இப்பெயர் காணப்படுகின்றது. இக்காலச் சிவனுடைய வடிவம் சாசனங்களிற் றெளிவாகச் சொல்லப்படுகின்றது. சிவனுக்கு மூன்று கண்களுண்டென்றும் அக்கண்கள் தனித்தனி வழிபடப் பட்டனவென்றும் சாசனங்கள் கூறுகின்றன. கடவுள் அரசனுகக் கருதப்பட்டார். அரசன் கடவுளுக்குப் பதில் அவர் ஆணையை ஏற்று நடத்துபவனுக எண்ணப்பட்டான். கடவுளுக்கு இறுவன் என்னும் பெயர் காணப்படுகின்றது. ஒரு சாசனத்தில் "தாண்டவன் இர்நால்மரம்" என்று காணப்படுகின்றது. இதற்குத் தாண்டவஞ் செய்யுங் கடவுளென்பது பொருள்.

முத்திரைகளிலிருந்து வாசிக்கப்பட்டவற்றுட் சில சொற்கள், யாழ், வேல், நாய்வேல், காலாள், எண் ஆள், எண்மை (=சிவன்), கலக்கு, நண்டு, நண்டூர், வேலூர், உழவன், அது, ஆண்டு, குட, குடவு, தடு, ஒட்டு, குட்டை, உதவு, அடு, அன்று, மாறு, அரி முதலியன. 'கோயில் எல்லாக் கடவுள் அது' என ஓர் சாசனத்திற் காணப்படுகின்றது. 'கோயிலிலுள்ள கடவுள் எல்லோரிலும் பெரிய கடவுள்' என்பது இதன் பொருள். முத்திரைகளில் குறள் வெண்பாவினலாய பாடல்கள் பல காணப்படுகின்றன. அக்கால எழுதும் முறை இடது புறத்தினின்று சென்று பின்பு வலப்புறத்தினின்றும் இடப்புறமாகச் செல்வதேயாகும்.

வட இந்தியாவிலும் தென்னிந்தியாவிலும் வழங்கிய பிராமி எழுத்துகள் மகன்யோதரோ

எழுத்துகளினின்றும் விருத்தியடைந்தவை. தென்னிந்திய திராவிடர்களுடைய எழுத்து மகன்யோதரோ எழுத்தை நேரே பின்பற்றியது. திருநெல்வேலியிற் கிடைத்த சரித்திர காலத்துக்கு முற்பட்ட பானை சட்டிகளிலும், நீலகிரி மலையில் வெட்டப்பட்டுள்ள சாசனங்களிலும், ஹைதராபாத் சமாதிகளிலும் இவ்வெழுத்துக் காணப்படுகின்றது.

மகன்யோதரோவில் வாழ்ந்தோர் திராவிடராயினமையின் வட இந்தியாவிலுள்ளோர் தமிழையே பேசினார்கள்.

சிந்துநதிப் பள்ளத்தாக்கிற் கிடைத்த சாசனங்கள் சிலவற்றிற் காணப்பட்ட வானநூற் குறிப்பைக் கொண்டும் மகன்யோதரோ முதலிய நகரங்களின் நாகரிகம் கி. மு. 5610 ஆண்டுகளுக்கு முற்பட்டதென ஹெரஸ் பாதிரியார் கூறுவர்.

---

Printed at the "Satya Nesan" Press, 3-27, Broadway, Madras.